# கல்கி

KALKI 19.2.89 ரூ. 2.



# ஒரு கிராமமே முன்னேறிய கதை

# சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி—:.பாரெக்ஸ்®

| குழந்தையின் உயரம் மற்றும்* எடையை சோதித்திடுங்கள் | ஆண் குழந்தை | | பெண் குழந்தை | |
|---|---|---|---|---|
| | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) |
| **3** மாதம் | **5.2** | 59.1 | **4.9** | 58.4 |
| **6** மாதம் | **6.7** | 64.7 | **6.1** | 63.7 |
| **9** மாதம் | **7.3** | 68.2 | **6.9** | 67.0 |
| **12** மாதம் | **8.4** | 73.9 | **7.8** | 72.5 |

* இது இந்தியக் குழந்தை மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தால் வழங்கப்பட்டது.
இது இந்தியக் குழந்தைகளுக்கு மட்டுமே சராசரியாகும். குழந்தையின் வளர்ச்சி உங்கள் டாக்டரின் திருப்திக்கேற்ற வகையில் இருந்தால் போதும்.

வண்ணமய பாப்பா— பராமரிப்பு வழிகாட்டி இலவசமாய் பெற்றிட இதை அனுப்புங்கள் இங்கே:
க்ளிண்டியா லிமிடெட் (FPD/51) டாக்டர் அன்னி பெஸன்ட் ரோட், ஓர்லி, பம்பாய்-400 025..




உங்கள் குழந்தை பரிபூரண அபிவிருத்தியும் வளர்ச்சியும் அடைந்திட போஷாக்கு நிறைந்த :.பாரெக்ஸ் அளியுங்கள்.

**:.பாரெக்ஸ்®**

**சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி**

26/203



# அ.தி.மு.க: "பிளவுபட்ட வீடு; வீழ்ந்தே தீரும்!"

— கே.ஏ.கே. கூறுகிறார்

"சென்னை ஆயிரம் விளக்குத் தொகுதியிலுள்ள வாக்காளர்களோடு உங்களுக்கு ஒரு நேரடித் தொடர்பே உண்டு என்கிற சூழ் நிலையில் — நடந்து முடிந்த தேர்தலில் ஆயிரம்விளக்குத்தொகுதியைவிட்டுவிட்டுத் திண்டுக்கல் தொகுதியில் போட்டியிட்டதென்பது, நீங்கள் மு. க. ஸ்டாலினுக்கு ஆயிரம் விளக்குத் தொகுதியை விட்டுக் கொடுத்த ஒரு செயல்தான் என்று பேசிக் கொள்கிறார்களே?"

"அப்படியா பேசிக் கொள்கிறார்கள்! உண்மை அதுவல்ல. இந்தத் தேர்தலில் ஒரு மாறுதல் தேவை என்று நினைத்தேன். பல காலம் அமைச்சராகப் பணியாற்றியவன் என்கிற முறையில் — தமிழகத்திலுள்ள எல்லாத் தொகுதிகளுமே என் தொகுதிதான் என்று கருதியதால்தான் இம்முறை நகரத்தை விட்டுத் தள்ளியிருக்கிற ஒரு தொகுதியில் போட்டியிடத் தீர்மானித்தேன். ஸ்டாலினுக்கு விட்டுக் கொடுப்பதற்காக அல்ல. கலைஞர்கூட அண்ணாநகரை விட்டுவிட்டுத் துறைமுகம் தொகுதியில் போட்டியிட்டாரே! அவர் யாருக்கு விட்டுக் கொடுத்து அப்படிச் செய்தார்? அதுவும் ஒரு மாறுதலுக்காகத்தான். அதுபோல்தான் நானும்."

"குறிப்பாகத் திண்டுக்கல்லைத் தேர்ந்தெடுத்ததற்கு என்ன காரணம்?"

"மற்றவர்களுக்கு எப்படியோ, என்னைப் பொறுத்தவரை திண்டுக்கல் என்பது ஒரு புனித நகரம். 72-ல் நடந்த இடைத்தேர்தலில் எங்களுக்குக் கொடுத்த வெற்றியின் மூலம் அண்ணா தி. மு. க.வுக்கே ஒரு வடிவம் தந்தது திண்டுக்கல்தான் என்பதால் அது எனக்குப் புனித நகரமாகத் தெரிகிறது. அந்த அடிப்படையில்தான் அதைத் தேர்ந்தெடுத்தேன்."

"புனித நகரம் இப்போது வெற்றியைத் தரவில்லையே?"

"அரசியல் வாழ்வில் ஏற்ற இறக்கங்கள் சர்வசாதாரணமானதொரு நிகழ்ச்சி. அதைப் பெரிதுபடுத்தத் தேவையில்லை. அரசியல் வாழ்வில் பொதுமக்களுக்குத் தொண்டு செய்வதற்குப் பதவியொரு வாய்ப்பே தவிர, பதவி மட்டுமேதான் வாய்ப்பு என்பதில்லை."

"பொதுவாக உங்கள் அணி (ஜானகி அணி) யின் ஒட்டுமொத்தத் தோல்விக்கு என்ன காரணம்?"

"உண்மையைச் சொல்வதென்றால் நாங்களெல்லாம் கூடியிருக்கிறோமே தவிர, ஒருவருக்கொருவர் நம்பிச் செயல்படவில்லை. வெளிப்படையாக ஒன்றாக இருப்பதுபோல் தோன்றினாலும், மனத்திற்குள் ஒருவரையொருவர் சந்தேகப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறோம். இந்தச் சந்தேகப் பிசாசுதான் எம். ஜி. ஆர். அவர்களின் மறைவுக்குப் பிறகு ஒன்றாக இருந்தது இரண்டாக — மூன்றாக — நான்காகச் சிதறுண்டு போனதற்கே காரணம். தலைவர் மறைந்த பிறகு அனைவருக்குமே தலைவர் பதவிதான் கண்ணில் பட்டதே தவிர, விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை துளியும் ஏறபடவில்லை. இந்நிலையில் எப்படி வெற்றியை எதிர்பார்க்க முடியும்?"

"அனைவரும் ஒன்றாகச் சேர்ந்தால் பிரச்னை சுலபமாகத் தீர்ந்துவிடுமல்லவா?"

"ஒன்றுசேருதல் என்பது இனி ஒருபோதும் நடக்காது. அப்படியே ஒன்று சேர்ந்தாலும் ஒருவருக்கொருவர் குழிபறிக்கிற நிலைமைதான் தீவிரமாக இருக்குமேயன்றிக் கட்சியை வளர்ப்பதில் யாரும் அக்கறை காட்ட மாட்டார்கள்."

"உங்கள் அணியைவிட ஜெயலலிதா அணி இத்தேர்தலில் அதிக வோட்டுகள் பெற்றிருப்பதால் அதுதான் அ. தி. மு. க. வின் உண்மையான அணி என்று சொல்ல

லாமா?''

''ஏராளமான பணச்செலவின் மூலம் பெறுகிற வெற்றி எப்படி உண்மையான வெற்றியாகும்? நான்கூட என் தொகுதியில் இன்னும் பத்து லட்ச ரூபாய் செலவு செய்திருந்தால் வெற்றியடைந்திருப்பேன். அப்படி வெற்றி பெற்றிருந்தால் அது எப்படி நிஜமானதாகும்?''

''நீங்கள் என்ன சொன்னாலும் ஜெயலலிதா இப்போது எதிர்க்கட்சித் தலைவராகிவிட்டரே?''

''ஆளுங்கட்சியாக இருப்பதைவிட எதிர்க்கட்சியாகச் செயல்படுவதுதான் மிகவும் கஷ்டம். அதற்கொரு நிதானமும் பக்குவமும் வேண்டும். அதெல்லாம் ஜெயலலிதாவிடம் நிச்சயம் கிடையாது என்பதை எதிர்காலம் நிரூபிக்கும். இன்னும் சொல்லப் போனால் எதிர்காலத்தில் அ. தி. மு. க. அணி என்று எதுவுமே இருக்காது. பிளவுபட்ட வீடு வீழ்ந்தே தீரும். எப்படி ஒரு காலத்தில் ஜஸ்டிஸ் கட்சி என்று ஒன்று இருந்ததோ — இன்று இல்லையோ — அப்படித்தான் அ. தி. மு. க. வும் ஒன்று இருந்தது; இப்போது இல்லை என்று வருங்காலச் சரித்திரம் சொல்லும்.''

''இந்நிலையில் உங்களைப் போன்றவர்களின் நிலை என்ன?''

''என்னைப் போன்றவர்கள் எம். ஜி. ஆர். அவர்களோடு சென்றதென்பது பதவிகளை அனுபவிக்க அல்ல; சோதனைகளை அனுபவிப்பதற்கே. அவரோடு நாங்கள் எதற்காகச் சென்றோம்? அவரோடு இருந்தால்தான் அண்ணாவின் லட்சியங்களை நிறைவேற்ற முடியும் என்கிற காரணத்தால் தான். அவருக்குப் பிறகு? இப்போது சோதனைகளைத் தாங்கிக் கொள்கிற — லட்சியத்தில் தடுமாற்றமில்லாத — தலைவர் இல்லாத நிலைதான் உருவாகிவிட்டது. அதனால் எங்கள் முடிவுகளையும் மறுபரிசீலனை செய்ய வேண்டியிருக்கிறது. அதாவது நாங்களும் பெரியார் — அண்ணா வழியைத்தான் பின்பற்றுகிறோம். தி. மு. க. வும் அதைத்தான் பின்பற்றுகிறது. எம். ஜி. ஆர். அவர்கள் இல்லாத நிலையில் ஒரே லட்சியமுள்ள திராவிட இயக்கங்கள் அனைத்தும் ஒன்றாக இணைவதில் எந்தவிதமான தவறும் இல்லை — அப்படி இணைந்தால் பெரியார் — அண்ணா கொள்கைகள் மேலும் வலிமை பெறும்.''

''முன்பு இதே கருணாநிதியின் தலைமையைக் குறை கூறித்தானே அ. தி. மு. க. உருவானது — வளர்ந்தது! அதேபோல நேற்று வரை ஜெயலலிதா, ஜானகி, நெடுஞ்செழியன், பண்ருட்டி அணிகள் என்று அனைவருமே ஒருவரையொருவர் வீதிக்கு வந்து குறை கூறிக் கொண்டிருந்தவர்கள்தாமே? இந்த நிலையில் அந்தக் கசப்பான நிகழ்ச்சிகளையெல்லாம் மறந்து விட்டு அனைவரும் ஒன்றாக எப்படி இணைந்திருக்க முடியும்?''

''மறந்துவிட முடியுமென்றே நான் நம்புகிறேன். ஜானகி அணி, ஜெயலலிதா அணி இவை இரண்டு மட்டும் இணைந்தால்தான் பிரச்னை உருவாகும். ஒருவரையொருவர் சந்தேகிக்கும் நிலை தொடரும். ஆனால், திராவிட இயக்கங்கள் அனைவருமே ஒன்று சேருகிற போதுவிட்டுக் கொடுக்கும் மனப்பான்மை வந்துவிடும். அதில் பிரச்னை ஏதும் இருக்காது.''

''அப்போதும் தலைமைப் பொறுப்பு பற்றிய பிரச்னை வருமே?''

''அங்குதான் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை வேண்டும் என்கிறேன். அப்படி விட்டுக் கொடுப்பது கோழைத்தனமல்ல; பெரியார் — அண்ணா கொள்கைகளை வலுப்படுத்துகிற ஒரு செயல் — அதுவும் வீரச்செயல் என்பதே என் கருத்து.''

''ஆக, திராவிட இயக்கங்கள் அனைத்தும் ஒன்றும் சேர வேண்டுமென்றால் காங்கிரஸ்தான் ஒரே எதிரி என்பது தெளிவாகிறது. இல்லையா?''

''அதை நாம் சொல்ல வேண்டியதேயில்லை. கடந்த தேர்தலின போது ஒட்டு மொத்தமாகத்திராவிட இயங்கங்கள் ஆண்ட இருபதாண்டுகளுமே இருண்ட காலம் என்று சொன்னதன் மூலம் காங்கிரஸே எங்களை எதிரி என்று பிரகடனப்படுத்திவிட்டதே!''

''தி. மு. க. வின் வெற்றி பற்றி உங்கள் கருத்து?''

''கடந்த பதின்மூன்றாண்டுகளாக அவர்கள் பதவியில் இல்லாததால் அவர்களின் மேல் எந்தவிதக் குற்றச் சாட்டும் இல்லை. சோதனை என்ற வேள்வித்தீயில் கடந்த பதின்மூன்றாண்டுகாலமாகப்புடம்போட்ட தங்கமாக ஜொலிக்கிறார்கள் தி. மு. க. வினர். அதற்கு மக்கள் கொடுத்த வெகுமதிதான் இந்த வெற்றி. மேலும் தோல்விகளைக் கண்டு துவளாமல் — கட்சியை எல்லாக் காலத்திலும் கட்டுக் கோப்பாக வைத்திருக்கும் திறமை படைத்தவர் கலைஞர். அந்தத் திறமைக்குக் கிடைத்த வெற்றிதான் இது.''

சந்திப்பு: **பிரின்ஸ்**
படம்: **சுபா**



மாருதி கார் தன்னுடைய விலையை சமீபத்தில் 3.6 சதம் உயர்த்தி விட்டது. இந்த விலையேற்றத்துக்கு அமெரிக்க டாலரின் மதிப்பு உயர்ந்ததுதான் காரணம் என கூறப்படுகிறது. அதே சமயம்... ஜப்பானியத் தயாரிப்பாளர்கள்... தங்களுடைய கார்களின் விலையை ஏழு சதவிகிதம் குறைத்துள்ளனர்.

நன்றி: 'டைம்ஸ் ஆஃப் இந்தியா.'

— மிதுனம்.



* நடுவில் சாத்தையா என்கிற தமிழ்க் குடிமகன். அவருக்கு இருபுறமும் அவரைச் சபாநாயகர் இருக்கைக்கு அழைத்துச் சென்ற அன்பழகன், ஜெயலலிதா.

# தமிழ்க்குடிமகன் பயன்படுத்திய ஆங்கிலச் சொற்கள்!

சபாநாயகர் பதவி ஏற்றதும் பாராட்டுகளுக்கு நன்றி தெரிவித்து இனிமையான தூய தமிழில் உரையாற்றிய பேராசிரியர் தமிழ்க்குடிமகன் தமது உரையில் இரண்டே இரண்டு ஆங்கிலச் சொற்களைப் பயன் படுத்தினார்.

இரண்டில் ஒன்று—''ஸ்பீக்கர்'' என்பது. எல்லாருக்கும் புரிகிற சொல். மற்றொரு சொல்லை தமிழ்நாடு சட்டப் பேரவையில் முதன்முதலாகப் பயன்படுத்தியவர் தமிழ்க் குடிமகனாகத்தான் இருக்க முடியும்!

செமாண்டிக்ஸ் (Semantics) என்று கல்வி அறிஞர்களுக்கே புரியக்கூடிய அந்தச் சொல்லைக் கூறியதுடன், சட்டமன்ற உறுப்பினர்களுக்கு அதன் பொருளையும் அழகான தமிழில் விளக்கிவிட்டார் தமிழ்க் குடிமகன். சபாநாயகர் பதவிக்கு ஸ்பீக்கர் என்ற பெயர் எப்படி வந்தது என்பதை ஸ்பீக்கர் என்ற சொல்லின்பொருளடிப்படையில்ஆராய்ந்து — அதாவது செமாண்டிக்ஸ் எனப்படும் சொற்பொருளியல்படி ஆராய்ந்து, தான் அதிகம் பேசாத ஸ்பீக்கராகவே இருக்க விரும்புவதாகத் தெரிவித்தார்!

புதிய சபாநாயகர் சொற்பொருளியல் ஆராய்ச்சி நடத்தினார் என்றால் முதல்வர் கலைஞர் கருணாநிதி வரலாற்று ஆராய்ச்சி நடத்தினார்! தமிழ்க்குடிமகன் உட்கார்ந்துள்ள நாற்காலி 1922 இல் வெலிங்டன் பிரபுவால் சென்னை சட்டமன்றத்தின் சிறப்பைப் பாராட்டி, பரிசாகத் தரப்பட்டதாம்.

முதல்வரின் பேச்சில் அவர் சந்திக்கவிருக்கிற முக்கியப் பிரச்னையான ஜாதிப் பிரச்னையின் எதிரொலி தெரிந்தது. பத்தாண்டுகளுக்கு முன்பு மதுரை யாதவர் கல்லூரியில் தமிழ்க்குடிமகன் முதல்வராக இருந்தபோது தாம் அழைக்கப்பட்டு; இமர் தலைப்பில் உரையாற்றியதைக் 'கலைஞர் நினைவுகூர்ந்தார். 'தமிழ்க்குடிமகன்' என்ற தலைப்பில்தான் அன்று பேசினாராம்!

''முதலில் தமிழ்க் குடிமகன் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நிலத்துக்கு இலக்கணம் வகுத்து வாழ்ந்த தமிழ்க் குடிமகனாகவே அறியப்பட்டிருந்தான். பின்னர் தான் யாதவர், செட்டியார், பிள்ளை என்றெல்லாம் பிரித்து அறியப்படுகிறவனாக ஆகி விட்டான். தமிழ்க் குடிமகனே உருவாக வேண்டும்'' என்று தாம் அன்று கூறியதைக் கலைஞர் இன்று மீண்டும் சொல்லி, ''எனது விருப்பம் தமிழ்க் குடிமகன் பேரவைத் தலை

* துணை சபாநாயகர்: டைபாய்டு காய்ச்சலோடு வந்தார்...



வராகியுள்ள காலத்தில் நிறைவேறட்டும்'' என்றார்.

சம்பிர்தாய பூர்வமான சபாநாயகர் பதவி ஏற்பு நிகழ்ச்சி இம்முறை வெறும் சடங்காக இல்லாமல் சுவையான தமிழ்க் கருத்தரங்கம் போலிருந்தது.

புதிய சபாநாயகருடன் பதவி ஏற்ற புதிய துணை சபாநாயகர் வழக்கறிஞர் துரைசாமி, டைபாய்டு காய்ச்சலிலிருந்து குணமாகாமலே அவைக்கு வந்திருந்தார்.

**பு**திய சபாநாயகரைப் பாராட்டிப் பலரும் பேசியபோது, பாண்டியன் கால நினைவுகளே எல்லார் பேச்சிலும் வெளிப்பட்டது. கல்வி அமைச்சர் பேராசிரியர் அன்பழகன், ஜெயலலிதா உட்பட பலரும் கடந்த காலக்கசப்புகளைப் பற்றிக் கோடி காட்டிப் பேசினார்கள். தி. மு. க. ஆதரவில் வெற்றி பெற்ற பார்வர்டு பிளாக் உறுப்பினர் வல்லரசு பகிரங்கமாகப் போட்டு உடைத்தே விட்டார். ''வானளாவிய அதிகாரம் என்ற பெயரில் நீதிமன்றத்தோடு கடந்தகாலத்தில் மோதல் ஏற்படுத்தியது போல உங்கள் காலத்தில் நிகழாது என நம்புகிறேன்'' என்று சொல்லிவிட்டார்.

அவருக்கு முன்பே பேசிய பி. எச். பாண்டியன் 'என் அனுபவம் உங்களுக்குப் பயன்படும்' என்று ஆரவாரத்துக்கிடையே சொன்னார். தமிழ்க்குடிமகன் கடைசியில் தாம் நல்ல சபாநாயகராகச் செயலாற்றத் தகுதியுடையவர்தாம் என்று நிரூபிக்கிற விதத்தில் இந்தப் பிரச்னையைப் பற்றிக்குறிப்பிட்டார். 'வானளாவிய அதிகாரம் உள்ளதை நீங்கள் எனக்கு அடிக்கடி நினைவுபடுத்தாதீர்கள்' என்று நகைச்சுவையாக அவர் சொன்னதும் எல்லாருமே சிரித்தார்கள். அப்படிப்பட்ட அதிகாரம் தம் பதவிக்கு இல்லை என்றும் கூறாமல், அதைப் பயன்படுத்துவேன் என்றும் சொல்லாமல் சமாளித்துவிட்டார்!

**ச**பாநாயகர் பதவி ஏற்பு நாளன்று கூட உறுப்பினர்களுக்கான இடங்கள் சபையில் ஒதுக்கப்படவில்லை. செல்வி ஜெயலலிதா, எதிர்கட்சித் தலைவர் இடத்தில் உட்கார்ந்திருந்தபோதும், மரபுப்படி புதிய சபாநாயகரை அவரது இருக்கைக்கு அவை முன்னவர் அன்பழகனுடன் சேர்ந்து அழைத்துவந்து அமரவைத்தபோதும் கூட — ஜெயலலிதாவை எதிர்க்கட்சித் தலைவர் என்று யாரும் குறிப்பிடவில்லை. முதல்வரும் சபாநாயகரும் கூட தங்கள் உரைகளில் பொதுவாக எதிர்க்கட்சித் தலைவர்கள் என்றே குறிப்பிட்டார்கள்!

பத்திரிகையாளர்கள் மத்தியில் ஜெயலலிதாவுக்கு எதிர்க்கட்சித் தலைவர் அந்தஸ்து உண்டா இல்லையா என்பது பற்றிய சர்ச்சையை விடப் பெரிதாக விவாதிக்கப்பட்டது அவரது கைகுலுக்கல்தான்!

தற்காலிக சபாநாயகராக மார்க்சிஸ்ட் உறுப்பினர் ரமணி பொறுப்பேற்ற அன்று, ஜெயலலிதா அவரைப் பாராட்டிக் கை நீட்டினார். ரமணி தயங்காமல் கைகுலுக்கினார். தமிழ்க்குடிமகன் பொறுப்பேற்ற அன்றும் ஜெயலலிதா கை நீட்டினார். அதற்குள் தமிழ்க்குடிமகன் இருகரம் கூப்பி வணக்கம் கூறவே, பதிலுக்குஇவரும்வணக்கம்சொல்லி விட்டு வந்தார்.

'ரமணிக்கு'க் கைகுலுக்க சான்ஸ் அடிச்சுது; தமிழ்க்குடிமகன் சான்ஸை விட்டுட்டார்' என்ற ரீதியில் பத்திரிகையாளர் வட்டாரத்தில் பல கமெண்ட்கள் அடிபட்டன. கவர்ச்சி அரசியலுக்குப் பலியாகாமல் பத்திரிகையாளர்கள் மட்டும் தப்பிக்க முடியுமா என்ன?

— நமது சிறப்பு நிருபர்.

அடுத்த இதழில்...

கோஷ்டிப் பூசலில் சிக்கித் தவிக்கிறார்...

— கவர் ஸ்டோரி



# வியர்க்குருவிலிருந்து நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

## நைஸில் உபயோகியுங்கள்.

## வியர்க்குருவிலிருந்து விரைவில் நிவாரணம் பெறுங்கள்.

நைஸில் **மருந்துக்கலவையுள்ள** பவுடர். இது வியர்க்குருவின் எந்தத் தொல்லையிலிருந்தும் உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே தயாரிக்கப்பட்டதாகும். டால்கம் பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவதைத் தடுப்பதுடன், வியர்க்குரு பரவுவதனின்றும் எதிர்த்துக் காக்கிறது.

1. அளவுக்கு மீறிய வியர்வை ஏற்படுவதைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இதமளிக்கிறது






HTA 1650

# பானி மிக்ஸ்®

## உடனடியாகத் தயாரிக்கக்கூடிய பாரிட்ஜ்.

## தானியங்கள், பழங்கள், முந்திரி கலந்த ஆகாரம்.

பானி மிக்ஸ் கோதுமை, சோளம், அரிசி, தேங்காய், ஆப்பிள், பேரிச்சை, திராட்சை மற்றும் முந்திரி போன்ற கலவையிலான ஊட்டமிகு, எளிதில் ஜீரணிக்கக்கூடிய பாரிட்ஜ் ஆகாரம். குடும்பத்தினருக்கு காலை சிற்றுண்டிக்கும் மாலையில் பள்ளி அல்லது அலுவலக வேலைகளுக்குப் பின் அளிக்கவும் உகந்தது. முதியோருக்கும் நோயிலிருந்து குணம் அடைவோர்க்கும் ஏற்ற உணவு.




**நிமிடங்களில் தயார்**

பானி மிக்ஸை விரைவாகவும், எளிதாகவும் தயாரிக்கலாம்.




கிண்ணத்தில் தேவையான பானி மிக்ஸை எடுக்கவும்.




அதோடு முன்னமே கொதித்த பாலை போதுமான அளவு மெதுவாகச் சேர்க்கவும்.




மிருதுவான கிரீம் போன்ற பாரிட்ஜ் ஆகாரம் பெற மெதுவாகக் கலக்கவும்.




சுவையான ஒவ்வொரு ஸ்பூன் பாரிட்ஜ் உணவையும் உங்கள் குடும்பத்தினர் சுவைத்து மகிழ்வார்கள்.

**பானி மிக்ஸ்®**

இந்தியாவிலேயே முதன் முறையாக!



வழங்குவோர்: க்ளிண்டியா லிமிடெட் (முன்னாள் க்ளாக்ஸோ)

குடும்ப உணவுகளில் நம்பிக்கைக்கு உகந்த பெயர்

GL/2/88 TAM

# புகைப்பட ஊர்வலங்கள் அபாரம்!



* கலைஞரின் வண்ண அட்டைப் படம் அபாரம். தேர்தல், வோட்டுப் பதிவு, தேர்தல் முடிவு, மந்திரி சபை, பதவிப் பிரமாணம் கலைஞரின் பொதுக் கூட்டம், 'அந்த ஆறு நாட்களை'ப் பற்றி நிருபரின் நேரடித் தொகுப்பு... அனைத்தும் சிறப்பாக இருந்தன. சென்னையில் இருந்த சந்தோஷத்தை ஏற்படுத்தி விட்டன புகைப்படங்களின் ஊர்வலங்கள்.

மதுரை — 2, எஸ். லெட்சுமணன்.

* எங்கள் மனத்தில் உள்ளவற்றை அப்படியே பிரதிபலித்த உங்கள் தலையங்கத்திற்குப் பாராட்டுக்கள்.

திருச்சி, பிறைசூடி.

* ஒருவரையொருவர் குற்றம் சொல்லிக் கொண்டு கட்சியை இழிவுபடுத்தும் வகையில் பேசி வரும் காங்கிரஸ்காரர்களுக்கு தங்கள் தலையங்கம் நல்ல பாடம்.

காஞ்சிபுரம், தமிழ் எழிலன்.

* 'மூப்பனாருக்குக் குழி பறிக்கிறார்கள்' தலையங்கம் கண்டேன். வி. பி. சிங்கைத் தமிழக மக்கள் பிரதமராகக் கருத மாட்டார்கள் என்று நீங்கள் கூறியிருப்பது மிகவும் தவறான ஒன்று. பிரதமரின் திறமையற்ற ஆட்சியைக் கண்டு சலிப்புற்று இருப்பவர்கள் இன்று வி. பி. சிங்கை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர்.

வேதாரண்யம், செல்வி வடுகன்.

* ஒரு காலகட்டத்தில் அ. இ. மு. க. (ஜெ) கட்சியினர் தேர்தலுக்கு முன் கணிசமான தொகுதிகளைக் காங்கிரசிற்குத் தரத் தயாராயிருந்தனர். ஆனால் ஜெயலலிதாவைக் காங்கிரஸ், முதல்வராக ஒப்புக் கொள்ள வேண்டும் என்ற ஒரே நிபந்தனையை அவர்கள் விதித்தார்கள். அந்த அணி ஏற்பட்டிருந்தால், இன்னும் நூறு அதிக இடங்களை அது பெற்று, அரசைக் கைப்பற்றிக் காங்கிரசும் கூட்டு மந்திரி சபையில் அங்கம் வகித்திருக்க வாய்ப்புண்டு. அந் நிலையில் ஜெயலலிதாவிற்குக் காங்கிரசின் ஆதரவு எப்போதும் தேவைப் பட்டிருக்கும். உங்கள் தலையங்கத்தில் குறிப்பிட்டது போல, மூப்பனாரும், சிதம்பரமும், ஜெயலலிதாவிற்கு 'முடிசூட்டிப் பன்னீர் தெளித்துச் சாமரம் வீசிக் காங்கிரசை அவரின் புடவை முந்தானையில்' பிணைத்திருக்க மாட்டார்கள்.

சென்னை — 90, த. சபாரத்னம்.

* 'அன்பிலே வென்றவன்' சிறுகதையில் கதாசிரியர் ஒப்பிலியப்பன் 'நாம் ஒருவரையொருவர் நேசிப்பதன் நோக்கம் நேசிக்கப்படுபவர் நன்றாக இருக்க வேண்டும் என்ற எண்ணத்தில்தான்' என்ற உயர்வான கருத்தைச் சுரேஷ் மூலம் கூறியிருப்பது அருமை.

மதுரை — 7, மதுரை எஸ். செல்வன்.

* 'பரிமாற்றம்' சிறுகதை உண்மையில் என்னுள்ளத்தைக் கொள்ளை கொண்டு விட்டது. இரண்டு உள்ளங்கள் ஒருவரையொருவர் புரிந்து கொண்டு மனப் பரிமாற்றம் செய்து கொள்ளும் போது, அவர்களுடைய காதலுக்குத் தடையாய் இருக்கும் அழகு அடையாளந் தெரியாமல் போய் விடும் எனும் கருத்தை உள்ளடக்கி, மென்மையான காதலுணர்வுகளைக் காதலர் இருவருக்குமிடையே ஏற்படும் கடிதப் பரிமாற்றத்தின் மூலமாக, அருமையாக வடித்துள்ள கதாசிரியரை என்ன பாராட்டினாலும் தகும்.

தக்கோலம், ஆ. புகாரி.

* மென்மையான, மனத்தை லேசாக்க வைக்கும் காதல் கதை தமயந்தியின் 'கைக்குட்டைக் கனவுகள்!'

ஸ்ரீரங்கம், ஏ. எஸ். முரளி.

* 'அறுபது ரூபாயில் தொடங்கி வளர்ந்த ஆலமரம்' கட்டுரை மிகவும் நன்றாயிருந்தது. ஹெல்த் சென்டர் நடத்துபவரை யார் என்று தெரியாது போனாலும் உள்ளது உள்ளபடியே எழுதிய கல்கிக்குப் பாராட்டுக்கள்.

தக்கோலம், அ. முஸ்தபா.

* 'மு. க. ஸ்டாலின் கலைஞரின் பலமா? பலவீனமா?' என்ற கேள்விக்குத் தராசு தந்துள்ள பதில் அருமை. புதிய முதல்வரின் புத்திரருக்கு, மிக நல்ல நேரத்தில், மிக மென்மையாகக் 'கல்கி' சொல்லியிருக்கும் அறிவுரை அது! வெல்டன் தராசு!

குத்தாலம், எஸ். ராஜா.

* 'மலையில் பிறந்த கலை; இயற்கை வளர்த்த இசை!' படிக்கும் போதே எங்கள் கண்முன் இயற்கை அழகு நர்த்தனம் புரிந்தது. இக் கட்டுரையைப் படித்து முடித்ததும், 'நாமும் ஒருமுறை இந்தப் படத்தைப் பார்த்து விட வேண்டும்' என்று மனசு துடிக்கிறது. கஷ்டத்தைப் பாராமல் அந்தப் பழங்குடி மக்களின் வாழ்க்கையோடு இணைந்த இசையையும், நடனத்தையும் படம் பிடித்துள்ள சௌதாமினி—ரமணி தம்பதிக்கு என் மனமுவந்த பாராட்டுக்கள்.

மதுரை — 9, பிரபாகர் பிரியன்.

* கல்கியில் வெளியான தேர்தல் செய்திகளில் பூண்டி துளசி ஐயா வாண்டையார் அவர்களைப் பற்றிப் பொது மக்கள் மத்தியில் சந்தேகிக்கும் அளவு செய்தி வெளியிட்டிருக்கிறீர்கள். காங்கிரஸில் உள்ள யாரும் கட்சிக்கு விரோதமாகச் செயல்பட அவர் அனுமதிக்க மாட்டார். தஞ்சை மாவட்டத்தில் அவருக்கும் அவரது ஆதரவாளர்களுக்கும் கட்சிக்குள் (மூப்பனார் குரூப்) எதிர்ப்புக் கொடுத்தாலும் இரவு பகல் பாராது அயராது உழைத்ததால்தான் தஞ்சை மாவட்டத்தில் ஒரு சில இடங்களாவது இந்தத் தேர்தலில் பெற முடிந்தது, என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருத்துறைப்பூண்டி, வி. டி. கருணாநிதி, தலைவர், வட்டார காங்கிரஸ் கமிட்டி.

“முன்னெல்லாம் வெதைப்புச் சமயம், நடவுச் சமயம்னு விவசாயத்துக்குப் பணம் தேவைப்படறப்போ, பக்கத்திலிருக்கிற சிதம்பரத்துக்குப் போய், வட்டிக்கடைக்காரங்க கிட்ட தாங்க கடன் வாங்கிக்கிட்டு வருவேன். அவங்க கிட்டக் கடன் வாங்கினா மூணு வட்டி நாலு வட்டி (36 சதம் 48 சதம்) கொடுக்க வேண்டியிருக்கும். அதனால வட்டியும் கட்டிக் கடனையும் அடைக்கறதுக்குள்ளே போதும் போதும்னு ஆயிடும். ஆனா இப்போ அப்படியில்லீங்க..... வட்டிக் கடைக்காரங்க பக்கமே தலை வெச்சுப் படுக்க வேண்டியதில்லே..... அப்படி உதவி பண்றாங்க சென்ட்ரல் பேங்க்காரங்க.....”

“அப்படி என்ன உதவி பண்றாங்க பூராசாமி?”

“என்னங்க இப்படிக் கேட்டுட்டீங்க.... ம்.... எனக்கு மட்டுமில்லீங்க... எங்க தீத்தாம்பாளையம் கிராமத்துக்கே உதவி பண்றாங்க..... கடனுதவி..... சென்ட்ரல் பேங்க்காரங்க இல்லைன்னா, இதோ பாருங்க..... இந்த முப்பத்தஞ்சு ஹார்ஸ்பவர் டிராக்டர் வாங்கியிருக்க முடியாதுங்க.... அவங்கதான் இதுக்குக்கடன் குடுத்தாங்க. இப்போ கடனும் அடைஞ்சுக்கிட்டே வருது.....” என்றார் ஒரு டிராக்டருக்குச் சொந்தக்காரராய் விவசாயம் செய்து கொண்டிருக்கும் பூராசாமி.

இவர் மட்டுமல்ல, சிதம்பரத்திலிருந்து பரங்கிப்பேட்டை செல்லும் வழியிலிருக்கும் தீத்தாம்பாளையம் கிராமத்திலிருக்கும் அனைவருமே சிதம்பரம் சென்ட்ரல் பாங்க் ஆப் இந்தியா கிளையைப் புகழ்கிறார்கள்.

“எனக்கு ஒரு ஏக்கர்தாங்க இருந்தது. சென்ட்ரல் பாங்க் கடன் வசதி செய்யறதாலே, கொஞ்சம் கொஞ்சமா விவசாயத்திலே முன்னேறி இப்போது மூணரை ஏக்கர் நிலம் வெச்சிருக்கேங்க.... இந்தப் புகையிலைப் பயிரெல்லாம் என்னோடதுதாங்க....” என்றார் பெருமிதத்தோடு சண்முகம்.

“எனக்கு இரண்டு ஏக்கர் இருக்குங்க. முன்னாடி தண்ணி பாய்ச்சறதுக்கான ஆயில் எஞ்சினை வாடகைக்குத்தாங்க வெச்சுக்கிட்டிருந்தேன். இப்போப் பாருங்க........ சென்ட்ரல் பாங்க் லோன் குடுத்ததாலே எஞ்சின் சொந்தமாயிட்டது. விவசாயத்திலும் நல்ல வருமானம். நல்லபடியா வீடும் கட்டி முடிச்சிட்டேன். இனிமே எனக்குக் கடனே தேவையில்லீங்க.... அந்த அளவுக்கு நான் வந்திட்டேன்....” என்றார் ராஜகோபால்.

“எங்க கிராமத்திலே இப்பல்லாம் யாரும் வட்டிக் கடைக்காரங்க கிட்டேபோய்க் கடன் வாங்கி அவதிப் படறதெல்லாம் மலையேறிப் போச்சுங்க....” என்றார் ராஜமாணிக்கம்.

“என்னோட வீட்டுக்காரருக்கு இன்னொரு குடும்பமும் இருக்குங்க. அதனால எனக்கு அவர்கிட்டேயிருந்து அவ்வளவா உதவி ஏதும் கிடையாது. எனக்கு மூணு பெண்கள். ஒரு பையன். இந்த நிலைல என்ன செய்யறது? எனக்கு ஒண்ணே



• மாணவ மாணவியர் சிரமைத்துத் தந்த குளம்

கால் ஏக்கர் நெலம் என் தாய் வீட்டுச் சீதனம் — இருந்தாலும் பணவசதி இல்லாததாலே சரியா விவசாயம் பண்ண முடியாத நிலை. இந்தச் சமயத்திலதான் எங்க ஊர்த் தலைவர் பாலகிருஷ்ணன் என்னை சென்டரல்பாங்க்குக்குக்கூட்டிக்கிட்டுப்போனார். அவங்களும் உடனே எனக்கு ஆயில் எஞ்சின் வாங்கறதுக்கும், பயிர் செய்யறதுக்கும் லோன் குடுத்தாங்க..... இப்போ பிரச்னை இல்லீங்க. பையனுக்கும் கல்யாணம் செஞ்சாச்சு. ஒரு பொண்ணையும் கட்டிக் குடுத்திட்டேன்....” என்றார் பாகிராபீ.

“எல்லாம் சரி.... பாங்க்ல லோன் வாங்கறதுன்னா லேசுப்பட்ட காரியம் இல்லையே..... சிபாரிசெல்லாம் கூட்டிக்கிட்டுப் போய்க் கேட்டாலும் கூட சுலபமாக் குடுத்திடமாட்டாங்களே.....” என்றோம் நாம்.

“எங்களுக்கெல்லாம் அப்படியில்லீங்க. போனவுடனே குடுத்திடறாங்க. எங்க கிராமத்திலிருக்கிற ஒவ்வொருத்தரைப் பத்தியும் சென்ட்ரல் பாங்க் காரங்க நல்லாத் தெரிஞ்சிருக்காங்க. சுருக்கமாச் சொன்னா பாங்க் காரங்களும் நாங்களும் உறவுக் காரங்க மாதிரி தாங்க பழகறோம். அடிக்கடி மானேஜர் நாராயணனும், பீல்டு ஆபீஸர் செல்வமும் கிராமத்துக்கு வரப்போக இருக்கிறாங்க. லோனுக்கான தவணைத் தொகையைக் கூட நாங்க சிதம்பரம் போய்ப் பாங்க்லதான் கட்டணும்னு இல்லே. இங்கேயே வந்து வாங்கிக்கிட்டு ரசீது தந்திடுவாங்க!” என்றார்கள் அனைவரும்.

பஞ்சாயத்துத் தலைவர் பாலகிருஷ்ணன் கிராமத்தைச் சுற்றிக் காண்பித்தார். பயிர் இல்லாத வயல்களே இல்லை. கண்ணுக் கெட்டிய தூரம்வரை நெல்லும் மிளகாயும் புகையிலையுமாக வயல்கள் தளதளத்துக் கொண்டிருந்தன. நந்தவனங்களைப்போல்



பூந்தோட்டங்கள் சிரித்துக் கொண்டிருந்தன.

''இந்தக் குளம் முன்பு ஒரு குட்டையைப் போலத்தான் இருந்தது. அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் விவசாய மாணவர்களும், மாணவிகளும் எங்கள் கிராமத்திற்கு வந்து ஒருவாரத்திற்குமேல் தங்கியிருந்தார்கள். அப்போது அவர்கள்தாம் இந்தக் குளத்தைச் சீர்படுத்திப் பஞ்சாயத்து வருமானத்திற்கு ஆகுமே என்று மீன்குஞ்சுகளைக் கொண்டு வந்து விட்டிருக்கிறார்கள். அவர்கள்தான் சுடுகாட்டுக்கான பாதையையும் போட்டுக் கொடுத்தார்கள். விவசாயத்தின் நவீன முறைகளையும் கிராம மக்களுக்குச் சொல்லிக் கொடுத்தார்கள். இப்போது, பாங்க்காரர்கள் மட்டுமல்ல; அந்த மாணவ, மாணவிகளும் கூட எங்கள் வீட்டுக் குழந்தைகள் மாதிரி ஆகிவிட்டார்கள்.... என்றார் தலைவர் பாலகிருஷ்ணன்.


● பூராசாமி.


● ராஜகோபால்.


● ராஜ மாணிக்கம்.


● பஞ்சாயத்துத் தலைவர் பாலகிருஷ்ணன்.

''எப்படி இப்படியொரு சாதனையைச் சாதித்தது சென்ட்ரல் பாங்க்? சாதாரணமாகக் கிராம மக்களுக்குக் கடன் கொடுத்தால் — ஏழை மக்களுக்குக் கடன் கொடுத்தால் திரும்பி வருவதே கஷ்டம் என்றல்லவா சொல்லுவார்கள்?'' என்று அந்த வங்கியின் சிதம்பரம் கிளை மானேஜர் நாராயணனிடம் கேட்டோம்.

''கிராமங்களைத் தத்தெடுத்துக் கொள்கிற திட்டம் என்பது எங்கள் பாங்கில் 69-ம் ஆண்டிலேயே வந்துவிட்டது. இந்த நீத்தாம்பாளையம் கிராமத்தை 81-ல் தத்தெடுத்தோம். அவர்களுக்கான கடன் வசதிகளை நாங்களாகவே முன்வந்து செய்து கொடுத்தோம். ஆலோசனைகள் வழங்கினோம். நல்ல முன்னேற்றம் ஏற்பட்டது. பொதுவாகக் கிராம மக்கள் யாரும் வாங்கிய கடன்களை ஏமாற்ற நினைப்பதில்லை. ஒரேயொரு விஷயம் என்னவென்றால், அவர்களிடம் அறுவடைக் காலங்களில் பணம் புழங்கும் போது நாமே சென்று வசூலிக்க வேண்டும். அப்போது உடனே கொடுத்துவிடுவார்கள். அவர்களாகவே வந்து கொடுப்பார்கள் என்று காத்திருந்தால் அவர்கள் வேறு செலவுகளைச் செய்து விடுகிறார்கள்!

''இந்த மனோபாவத்தை நாங்கள் முதலில் புரிந்து கொண்டோம். அதனால், பாங்க் அதிகாரிகள், அதிகார தோரணையோடு அல்லாமல், ஓர் உறவுக்காரரைப் போல — கிராமத்திலுள்ள ஒவ்வொரு குடும்ப நலனிலும் அக்கறை கொண்டு பழகுகிறோம். எனவே எங்கள் உறவு பலப்பட்டுப் போய் விட்டது. அதனால் இங்கு ஒருவரையொருவர் ஏமாற்றுதல் என்கிற பிரச்னையே எழுவதில்லை'' என்றார் மானேஜர் நாராயணன்.

''ஹரிஜன மக்கள் எப்படி?'' என்றோம் நாம் அவரிடம்.

''ஹரிஜன மக்களுக்குக் கறவை மாடுகள்

வாங்கிக் கொடுத்தோம். ஆனால் யாரும் அவற்றைச் சரிவரப் பராமரிப்புச் செய்ய வில்லை. கடனையும் யாரும் முழுமையாக அடைக்கவில்லை. இன்னும் இருபதாயிரம் ரூபாய்க்குமேல் அவர்களிடம் பாக்கியிருப்பது வாஸ்தவம்தான். ஆனாலும் அவர்கள் பாங்க்கை ஏமாற்ற நினைக்கிறார்கள் என்று நாங்கள் நம்பவில்லை. காரணம் வேறு. அவர்கள் அனைவருமே சொந்தமான வீட்டு மனை கூட இல்லாத தினக்கூலிகள். படிப்பறிவும் இல்லை. இதன் காரணத்தாலோ என்னவோ, அடிப்படையில் அவர்களிடம் நாளை என்பது பற்றிய கவலையே இல்லாமல் போய் விட்டது. ஒவ்வொருவரும் ஏதோ அவர்களின் வாழ்க்கை இன்றோடு முடிந்து போகிற மாதிரி, இன்று கிடைக்கும் கூலியை இன்றே செலவழித்து வாழ்க்கையை அனுபவித்துவிட வேண்டும் என்கிற பரபரப்பில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கடன் தொகையைத் திருப்பித்தராமல் போனதற்கான மூலகாரணம் இதுதான் என்று நினைக்கிறோம்.

''நாளை என்பது பற்றியதோர் நம்பிக்கை வந்துவிட்டால் அவர்களும் நல்லபடியாக முன்னேறி விடுவார்கள். அந்த நம்பிக்கையை அவர்கள் மத்தியில் ஏற்படுத்த வேண்டும். அதற்காகத்தான் அண்ணாமலைப் பல்கலைக் கழக என். எஸ். எஸ். யூனிட்டின் துணையையும் பெற்று அந்த மாணவ, மாணவிகளிடமுள்ள உழைப்புச் சக்தியையும்பயன் படுத்திக் கொண்டிருக்கிறோம். அவர்களும் சந்தோஷத்தோடு எங்களோடு வந்து பணியாற்றிக் கொண்டிருக்கிறார்கள். நிச்சயம் ஒருநாள் இதிலும் நாங்கள் வெற்றி பெறுவோம்....'' என்று நம்பிக்கையோடு சொன்னார்கள் மானேஜர் நாராயணனும் பீல்டு ஆபீஸர் செல்வமும்.

* ஹரிஜனங்கள்: நாளை பற்றிய கவலை இல்லை!



''கிராம மக்களிடம் உங்கள் அனுபவம் எப்படி?'' — இந்தக் கேள்வியை அண்ணாமலைப் பல்கலைக் கழக விவசாயத்துறை விரிவுரையாளர் சுந்தரவரதராஜனிடமும், மாணவர்கள் சங்கர்ராமன், பாலபாஸ்கர் ராம்குமார், செல்லபாண்டியன், மாணவி அனுராதா ஆகியோரிடமும் கேட்டோம்.



* மானேஜர் நாராயணன்: ஃபீல்டு ஆபீஸர் செல்வம்.

''ஆரம்பத்தில் எங்களை அவர்கள் அந்நியமாகத்தான் பார்த்தார்கள். பழகப் பழகத் தங்கள் வீட்டுக் குழந்தைகளைப் போல் எங்களிடம் அன்பு பாராட்ட ஆரம்பித்து விட்டார்கள். சொல்லப் போனால் நாங்கள் அவர்களுக்குச் சொல்லிக் கொடுத்தவற்றை விடக் கற்றுக் கொண்டதே அதிகம். உதாரணமாக, ஓர் ஏக்கருக்கான புகையிலை நாற்றுக்குப் பதினாறு கிராம் விதை விதைத்தாலே போதும் என்று நாங்கள் படிக்கிறோம். ஆனால் நிஜத்தில் அப்படி விதைத்தால் இருபது முப்பது நாற்றுக்கள்தான் மிஞ்சும்! காரணம், மண்வாகு ஒவ்வோர் இடத்திலும் வேறு படுகிறது. அதற்குத் தகுந்தாற்போல் விதைக்க வேண்டும், ஏட்டுப் படிப்புக்கும் நடைமுறைக்கும் சம்பந்தமில்லை என்பதைத் தெரிந்து கொண்டோம். இந்தக் கிராமத்தில் உள்ள வயல்களைப் போல் களைகளே இல்லாத வயல்களை எங்கும் பார்க்க முடியாது. விவ்சாய மாணவர்களான எங்களுடைய ''மாதிரி வயல்'' கள் கூட இந்த அளவுக்குத் துப்புரவாக இல்லை.'' என்றார்கள் அவர்கள்.

''கிராமப் பெண்கள் சிலருக்கு வெறும் கையெழுத்து மட்டும்போடக்கற்றுக்கொடுத்தோம். அவர்களுக்கு ஒரே சந்தோஷம். அதோடு எங்களிடம் அவர்களுக்கு ஏராள நம்பிக்கையும் அன்பும் ஏற்பட்டுவிட்டது. சுருக்கமாகச் சொன்னால், இங்கு வருவதென்பது எங்கள் சொந்தக் கிராமத்திற்கே வருவதுபோன்ற உணர்வையே ஏற்படுத்துகிறது.....'' என்றார் மாணவி அனுராதா.

கிராம மக்களைத் தன்னிறைவு அடையச் செய்து அவர்களை — அவர்களின் உழைப்பைக் கொண்டே — முன்னேற்ற முடியும் என்பதற்குத் தீத்தாம்பாளையம் ஒரு முன்னுதாரணம். இதில் கண்ட வெற்றி சிதம்பரத்தைச் சுற்றியுள்ள வேறு சில கிராமங்களையும் தத்தெடுக்க சென்ட்ரல் பேங்குக்குத் துணிச்சலைத் தந்திருக்கிறது.

— இளங்கோவன்.

அட்டையில்: மாணவி அனுராதா, திருமதி பாகிராபீ.

அட்டை வண்ணப்படங்களும்;
படங்களும்: யோகா.


கம்பூச்சியா தகராறை தீர்த்து வைக்கப் போறேன்! நீங்க சண்டை போடாம சமத்தா இருக்கணும்!
இ-காங்கிரஸ் உள்கட்சிப் பூசல்கள்


விடுதலைப் புலிகளுக்குப் புத்தி சொல்லி சமாதானம் பண்ணுங்க. நீங்க சொன்னா தான் நடக்கும்!
பாகல் விடுதலைக்கு முயற்சி பண்ணுங்க! உங்களாலே தான் முடியும்!
பர்னாலா
அமிர்தலிங்கம்


ஆட்சி அமைக்கத் தான் முடியல்லே!.. எங்க கட்சிக் காரருக்குத் தற்காலிக சபாநாயகர் பதவியாவது கொடுத்திருக்கக் கூடாதா?
தமிழக சட்ட மன்ற இ-காங்கிரஸ்



# கல்கி

1989 பிப்ரவரி 19
மலர் 47 இதழ் 29
விபவ மாசி 8



## கருணாநிதி எழுத வேண்டிய புதிய அத்தியாயம்

தேர்தலுக்கு முன்பு இலங்கைப் பிரச்னை பற்றி கருணாநிதி பேசி வந்த தோரணைக்கும் பதவிக்கு வந்த பின் பேசுகிற விதத்துக்கும் பெருமளவு வித்தியாசம் உள்ளது. உணர்ச்சி கொப்புளிக்கப் பேசி மக்களுக்கு முறுக்கேற்றி விட்ட கருணாநிதி இன்று இல்லை. ஆட்சியில் அமர்ந்திருப்பதால் தம்மைக் கட்டுப்படுத்திக் கொண்டு, 'பிரதமரிடம் விவாதிப்பேன்; பின்னர் சொல்கிறேன்' என்று நிருபர்களிடம் கூறுகிறார்.

ஆட்சி மாற்றம் என்பது தமிழ் நாட்டில் மட்டுமல்ல; இலங்கையிலும் ஏற்பட்டிருக்கிறது. இந்தியா — இலங்கை ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட ஜெயவர்த்தன போய், ஒப்பந்தத்துக்குத் தீவிர எதிர்ப்புத் தெரிவித்த பிரேமதாசா பதவிக்கு வந்தாகி விட்டது. அவரது கோரிக்கையின் அடிப்படையில், இந்திய அமைதிப்படை படிப்படியாகத் தாய்நாடு திரும்பிக் கொண்டும் இருக்கிறது. எனவே, ஈழத் தமிழர் பிரச்னையில் ஒரு புதிய சூழ்நிலை தோன்றியுள்ளது என்பதிலும், அதற்கேற்ப புதிய அணுகுமுறை தேவைப்படுகிறது என்பதிலும் ஐயமில்லை.

சூழ்நிலைதான் மாறியுள்ளதே தவிர, பிரச்னையின் அடிப்படைத் தன்மை மாறவில்லை. அதாவது, விடுதலைப் புலிகளின் சுதந்திரத் தனி ஈழக் கோரிக்கையும் வன்முறையைப் பயன்படுத்தியேனும் அதனை அடைந்தே தீருவது என்ற அவர்களது உறுதியும் அப்படியே இருக்கிறது. இவை இரண்டுக்கும் இடமளிப்பதில்லை என்ற இலங்கை அரசின் தீர்மானமும் ஆட்டம் காணாதிருக்கிறது. வடதுருவமும் தென் துருவமுமாக உள்ள இந்தப் போக்கு மாறாத வரை, ஈழத்தில் நிரந்தர அமைதி நிலவப் போவதில்லை. எனவே, ''கருணாநிதி தமது செல்வாக்கைப் பயன்படுத்தி விடுதலைப் புலிகள் தங்கள் வன்முறைப் போக்கைக் கைவிடுமாறு செய்ய வேண்டும்; அவர்களை ஜனநாயகப் பாதைக்குத் திருப்ப வேண்டும்'' என்ற அமிர்தலிங்கத்தின் கோரிக்கை மிக மிக முக்கியமானதும் நியாயமானதும் ஆகும்.

தமிழ் நாட்டில் தங்கள் வன்முறைப் போக்குக்கு ஆதரவு தருகிற அரசோ, தலைவரோ இல்லை என்பது நிச்சயமானால் விடுதலைப் புலிகள் யதார்த்தப் போக்குக்குத் திரும்புவார்கள். சுதந்திர தமிழ் ஈழம் என்ற கனவுலகில் சஞ்சரிக்காமல், சுயாட்சியை உறுதி செய்கிற தமிழ் மாநிலத்துடன் திருப்தி அடைவார்கள். மக்களிடம் அம் மாநிலத்தின் அதிகாரங்களை வழங்கி, அவர்களின் பிரதிநிதிகளாக ஆட்சி நடத்த, அவர்களிடமிருந்தே உரிமையைக் கோரிப் பெறுவதுதான் கௌரவம் என்று புரிந்து கொள்வார்கள்.

''வன்முறையில் ஈடுபடுவது விடுதலைப் புலிகள் மட்டுமல்ல'' என்று தமிழகப் பத்திரிகை நிருபர் ஒருவருக்குப் பதிலளித்த முதல்வர், 'கல்ஃப் நியூஸ்' என்ற துபாய்ப் பத்திரிகைக்கு அளித்துள்ள பேட்டியில், ''விடுதலைப்புலிகள் உள்ளிட்ட அனைத்துத் தரப்பினரும் கூடி பேச்சு வார்த்தைகள் நடத்த வேண்டும்'' என்றும் கருத்துத் தெரிவித்துள்ளார். அதே சமயம், ''பேச்சு வார்த்தைக்கு முன் அங்கு அமைதி திரும்ப வேண்டும்'' என்பதாகவும் குறிப்பிட்டுள்ளார். விடுதலைப் புலிகளுடன் பேச்சு வார்த்தை நடத்த இந்திய அரசு என்றைக்குமே தயாராகத்தான் இருந்து வந்திருக்கிறது. விடுதலைப் புலிகள் ஆயுதங்களைத் துறந்து, ஜனநாயகப் பாதையில் செல்வதாக உறுதி அளித்தால் பேச்சு வார்த்தையும் நடக்கும்; கருணாநிதி குறிப்பிடுகிற அமைதியும் உடனே திரும்பி விடும். ஈழத்தில் மட்டுமல்ல, இலங்கை முழுவதுமே அமைதி பரவும். அமைதிப்படைக்கு அங்கு வேலையே இல்லாமல் போகும்.

ஆனால் விடுதலைப் புலிகளின் வன்முறைகளுக்கு மறைமுகமாகவோ நேர்முகமாகவோ முதல்வர் ஆதரவு அளிப்பது, தமிழகத்தை மட்டுமல்ல, தென் மாநிலங்கள் முழுவதையுமே பயங்கரவாத அரக்கனிடம் அடகு வைப்பது போன்றதாகும். ஆந்திர மாநிலத்தில் அண்மையில் நக்ஸலைட்டுகள் பெற்றிருந்த பயங்கர ஆயுதங்கள் விடுதலைப் புலிகளிடம் பெறப்பட்டவை என்பதை முதல்வர் எண்ணிப்பார்க்க வேண்டும். வன்முறையைக் கைவிடாத விடுதலைப் புலிகளுக்கு தமிழகத்திலே அடைக்கலம் தருவதோ அல்லது கண்டு கொள்ளாமல் இருப்பதோ கூட தற்கொலைக்கு ஒப்பானது.

விடுதலைப் புலிகளைக் கருணாநிதி தாக்கி, கண்டித்த காலமும் உண்டு; தூண்டி விடுவது போல் போற்றிய காலமும் உண்டு. ஆனால் பழங் கதைகளை மறந்து விட்டு இன்று தமிழக முதல்வர் என்ற முறையில் அவர் ஈழப் பிரச்னையில் புதிய அத்தியாயம் எழுத வேண்டும்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# குடும்ப நீதிமன்றம்: மிகப் பெரிய ஏமாற்றம்!



* சுதா ராமலிங்கம்.



* வாசுகி.

சுந்தரிக்குக் கால் கொஞ்சம் ஊனம். கண்பார்வையற்ற பாஸ்கரன் அவளை மணந்தான். சுந்தரியின் வருகையால் பாஸ்கரனின் வாழ்க்கையில் புது வெளிச்சம் பரவியது. ஆனால், அதுவரையில் அவனை ஏமாற்றிச் சொத்துக்களை அனுபவித்து வந்த பாஸ்கரனின் உறவினர்களுக்கோ சுந்தரியின் வருகை இடைஞ்சலாக இருந்தது. எனவே, சுந்தரியின் மீது ஏதேதோ பழிகளைச் சுமத்திப் பாஸ்கரனின் மனத்தைக் கலைத்தார்கள்! விவகாரம் முற்றிப்போய் விவாகரத்து வழக்கானது.

இரண்டாண்டுகளாக இழுக்கடிக்கப் பட்டுக் கொண்டிருந்த வழக்கு, அண்மையில் புதிதாகத் துவங்கப்பட்டிருக்கும் குடும்ப நீதி மன்றத்துக்கு மாற்றப்பட்டது. கணவன் — மனைவிக்கிடையே எழும் பிரச்னைகளுக்குக் கூடியவரை சமரசம் செய்து வைக்கவே விரும்பும் குடும்ப நீதி மன்ற விசாரணையின் போது, சுந்தரியோடு சேர்ந்து வாழ விருப்பம் தெரிவித்தான் பாஸ்கரன். சுந்தரிக்கும் அதில் ஆட்சேபணை ஏதும் இல்லையென்பதால் இருவரிடமும் வழக்கை வாபஸ் பெற்றுக் கொண்டதாக எழுதி வாங்கிக் கொண்டு அனுப்பி வைத்தார் நீதிபதி.

ஆனால், பாஸ்கரனோ நீதிபதியிடம் கொடுத்த வாக்கை நீதிமன்ற வாசல்வரை கூடக் காப்பாற்ற வில்லை! நீதிமன்றத்திலிருந்து வெளியே வந்தவுடனேயே சுந்தரியை, நிராதரவாக விட்டு விட்டுச் சென்று விட்டான்!

இனி அவள் மறுபடியும் அப்பீல் செய்து, கோர்ட்டுக்கு நடையாய் நடந்து வழக்கு என்று வரும்போது பார்த்துக் கொள்ளலாம் என்று நினைத்து விட்டான் போலும் அவன்! பிறகு தீர்ப்பு அவளுக்குச் சாதகமாக இருந்தால் கூட அவள் இனி அப்பீல் செய்யும் தேதியிலிருந்து ஜீவனாம்சம் கொடுத்தால் போதும் என்று லாபக் கணக்குப் போட்டிருப்பான் போலும்! எப்படிப் பார்த்

தாலும் குடும்ப நீதிமன்றத்தின் சமரசப் போக்கால் அவனுக்குலாபம்தான். சுந்தரிக்கு நஷ்டம்தான்.

**வி**வாகரத்து, குழந்தைகள் மீதான உரிமை, ஜீவனாம்சம், சொத்துப் பிரச்னை என்று கணவன் – மனைவிக்கிடையில் ஏற்படும் சிவில் வழக்குகளை விசாரிக்கவென்றே ஏற்பட்ட இந்தக் குடும்ப நீதிமன்றத்தில் வழக்கறிஞர்கள் சென்று வாதாடவோ, கட்சிக்காரர்களோடு உடனிருக்கவோ அனுமதியில்லை. இதனால்தான், சுந்தரிபோன்ற அப்பாவிப் பெண்கள் இந்நீதிமன்றத்தில் ஏமாற்றமடைகிறார்களா?

''பொதுவாக வாதாடுகிற உரிமைதான் இல்லையே தவிர, சில சிக்கலான வழக்குகளில் வழக்கறிஞர் வாதிடுவது அவசியம் என்று நீதிபதி கருதினால் வழக்கறிஞர்களை நியமித்துக் கொள்ளலாம். அப்பீல் செய்யும் போது வக்கீல்கள் வாதாட அனுமதி உண்டு. இருப்பினும் வரும் வழக்கில் சமரசம் ஏற்பட வாய்ப்பிருக்கிறது என்று நீதிபதி நினைத்தால் வழக்கை அவர் எவ்வளவு காலத்துக்கு வேண்டுமானாலும் ஒத்திப் போடலாம்; ஒரு குறிப்பிட்ட காலவரையறை என்பது கிடையாது என்பதால் குடும்ப நீதிமன்றம் என்று தனியாக அமைக்கப் பட்டாலும் வழக்குகள் துரிதமாக நடந்து முடிந்துவிடும் என்பதற்கான உத்தரவாதமில்லை.....'' என்கிறார் வழக்கறிஞர் சுதா ராமலிங்கம்.

''குடும்ப நீதிமன்றங்களில் வக்கீல்கள் நிராகரிக்கப்படுவதால் வக்கீல் தொழில் பாதிக்கும் என்பதையோ, எல்லா வழக்குகளுக்குமே வழக்கறிஞர்களுடைய வாதம் தேவை என்பதையோ ஒப்புக் கொள்ள முடியாது. சாதாரணமானதொரு ஜீவனாம்ச வழக்கை இரண்டே நாளில் முடித்துவிட முடியும் என்கிற நிலையிலும், அதையே இரண்டாண்டுகள் வரை நீடிக்க வைத்துச் சுய ஆதாயம் தேடும் வக்கீல்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். இந்நிலையில் துரித காலத்தில் வழக்குகளை முடிக்கவும் விவாகரத்து, ஜீவனாம்சம், குழந்தைகள் மீதான உரிமைகள், சொத்துப் பிரச்னை போன்ற வழக்குகளைத் தீர்த்துக் கொள்ளவும் குடும்ப நீதிமன்றம் மிகவும் வசதியாக இருக்கிறது. மேலும், வழக்கின் மதிப்புக்குத் தகுந்தபடி கோர்ட் ஸ்டாம்பு ஒட்ட வேண்டிய அவசியமில்லை; வக்கீல்கள் நியமிக்கப்பட வேண்டியிருக்கும் போது அதற்கான செலவை அரசே ஏற்கிறது என்பதும் ஏழைப் பெண்களுக்கு மிகவும் உதவிகரமான விஷயங்கள். சில நடைமுறைச் சிக்கல்கள் தீர்க்கப்பட்டால் இது மிகவும் உபயோகமாய் இருக்கும்'' என்கிறார் வழக்கறிஞர் சந்துரு.

**எ**ன்னென்ன குறைகள் களையப்பட வேண்டும்?

''ஏற்கெனவே நிலவுகிற சட்டங்களில் பெரும்பாலானவை பெண்களுக்குச் சாதகமாக இல்லை. கிறிஸ்துவப் பெண்களுக்கு விவாகரத்து சுலபமில்லை. முஸ்லீம் பெண்களுக்கோ ஜீவனாம்சத்துக்கு வழியில்லை. இந்துப் பெண்களுக்கோ சொத்துரிமையில் சமபங்கு இல்லை. இந்தச் சட்டங்களின் அடிப்படையில்தான் குடும்ப நீதிமன்றங்களின் தீர்ப்புகளும் இருக்கும் என்பதால், இதில் புதிதாக ஒருலாபமும் இல்லை. மேலும் பெண்கள் தங்கள் கட்சியை எடுத்துச் சொல்வதற்காகவும், தம்பதியினரிடையே சமரச முயற்சி செய்து வைப்பதற்காகவும் மூன்று மாதங்களுக்கு ஒருமுறை இந்நீதிமன்றங்களுக்குக் கவுன்சிலர்கள் நியமிக்கப்படுகிறார்கள். இவர்கள் சமூக நலத்துறைகளிலிருந்து மட்டுமே நியமிக்கப் படுவதால் பெண்களின் பிரச்னைகளைப் பல கோணங்களிலும் புரிந்து கொள்வது அவர்களால் முடியும் என்று நம்பமுடியவில்லை. எனவே மாதர் உரிமைகளுக்காகப் போராடிவரும் இயக்கங்களிலிருந்தும் கவுன்சிலர்களை நியமிக்க வேண்டும். மேலும், லேபர் கோர்ட்டுகளில் தொழிற் சங்கப் பிரதிநிதிகளுக்கு வாதாடும் உரிமை இருப்பது போல் மாதர் அமைப்புகளுக்கும் பெண்களின் சார்பில் குடும்ப நீதிமன்றங்களில் வாதாடும் உரிமை தரப்பட வேண்டும்....'' என்கிறார் ஜனநாயக மாதர் சங்க சென்னைக் கிளையின் செயலாளர் வாசுகி.

''மாதர் சங்கங்கள் கூறும் குறைகள் நியாயமானவையே. குடும்ப நீதிமன்றத்தின் சில விதிகளை மாற்ற உயர் நீதிமன்றத்துக்கு அதிகாரமிருக்கிறது. எனவே, அதனை வற்புறுத்தி மாற்றங்களைக் கொண்டு வருவதும் மாதர் சங்கங்களின் முயற்சியில்தான் இருக்கிறது!'' என்கிறார் வழக்கறிஞர் சந்துரு.

சந்திப்பு: **பாரதி.**

புகைப்படங்கள்: **வி. கணேசன்.**



''உங்க ப்ரமோஷனுக்குக் காரணம் உங்க மனைவிதான்னு எப்படிச் சொல்றீங்க?''

''அவ வந்த பிறகுதானே எதற்கும் தலையாட்டும் பழக்கம் எனக்கு வந்தது!''

— ஜயாறு ஐந்தாமரை.



நூலாசிரியர்: மணவை முஸ்தபா.

# தமிழ்: உணர்ச்சி மட்டும் போதாது; வளர்ச்சியும் தேவை!

சென்னை அரசாங்கம்' 1932-ம் ஆண்டிலேயே ஒரு குழுவை அமைத்துக் கலைச் சொற்களைத் தயாரித்துத் தொகுக்கும் பொறுப்பை ஒப்படைத்தது.

சுமார் ஏழாயிரத்துக்கு மேற்பட்ட கலைச் சொற்களை இக் குழு உருவாக்கிய போதிலும் அவற்றில் பெரும்பாலான கலைச் சொற்கள் ஆங்கிலக் கலைச் சொற்களின் ஒலிபெயர்ப்பாகவும் மற்றவை சமஸ்கிருதக் கலைச் சொற்களாகவுமே அமைந்திருந்தன. சாதாரணக் கலைச் சொற்களுக்குக் கூட சமஸ்கிருத மொழியில் விரிவான வியாக்கியானம் செய்யும் வகையில் 'கலைச் சொல்லாக்கம்' கொடுக்கப்பட்டிருந்தது மிகவும் விந்தையாக உள்ளது. சான்றாக 'CENSUS REPORT' என்ற ஆங்கிலச் சொல்லுக்கு 'குலஸ்தீரி புருஷபால விருத்த ஆயவ்யய பரிமாண பத்திரிகை' எனக் கலைச் சொல் கொடுக்கப்பட்டிருந்தது!

இன்றைய பெரியார் எழுத்துச் சீர்மை உணர்வு தோன்றுவதற்குத் தோற்றுவாயாக அமைந்தது 1934 ஆம் ஆண்டில் சென்னையில் நடைபெற்ற தமிழன்பர் மாநாடாகும். அம் மாநாடு மேற்கொண்ட தீர்மானப்படி அமைக்கப்பட்ட குழுவின் பரிந்துரையின் அடிப்படையில் பெரியார் உருவாக்கிப் பயன்படுத்திய எழுத்துச் சீர்மையே இன்றைய அரசுத் தமிழ் சீர்திருத்தம். 1941 இல் மதுரையில் நடைபெற்ற மதுரை மாநாடும், 1948 இல் சென்னையில் நடைபெற்ற மாநாடும், எழுத்துச் சீர்மை முயற்சியை மேற்கொண்டன. அதன் பயனாக எழுத்துச் சீர்மை கொண்ட தமிழை 'சுதேசமித்திரன்' சில காலம் கைக் கொண்டு பின்னர் கை விட்டு விட்டது! தொடர்ந்து பெரியார் 'விடுதலை' இதழ் வாயிலாகக் கொண்டு வந்தார்.

இருபதாம் நூற்றாண்டில் அறிவியல் கலைச் சொல்லாக்கச் சிந்தனையில் முனைப்புக் காட்டியவர்களில் மூதறிஞர் ராஜாஜி தனித்துவத்தோடு விளங்குகிறார். அறிவியல் நுட்பச் செய்திகளை எளிதாகத் தமிழில் சொல்வதற்கேற்ற வகையில் தமிழில் அறிவியல் கலைச் சொற்களை உருவாக்க வேண்டும் என்பதிலே பேரார்வம் காட்டியதோடு பல கலைச் சொற்களை உருவாக்கி வெளிப்படுத்தினார்.

தனிப்பட்ட ஒருவருடைய முனைப்போடு இத் துறையில் ஆர்வமுள்ள மற்றவர்களின் முயற்சியும் இணைந்து செயல்பட வேண்டும் என்ற எண்ணத்தின் அடிப்படையில் வெங்கட சுப்பய்யர் என்பவருடன் இணைந்து 'தமிழ் சாஸ்திர பரிபாஷைச் சங்கத்தாரின் பத்திரிகை' என்ற இதழை 1916 ஆம் ஆண்டில் சேலத்தில் ராஜாஜி தொடங்கினார். இதனாலெல்லாம் பெரும் பயன் விளையவில்லை என்றாலும் கலைச் சொற் பெருக்கத்தின் முக்கியத்துவத்தை உணர்ந்து அதற்கெனத் தனி இதழ் தொடங்கிய சிறப்புக்குரியவராகிறார்.

தமிழ் பயிற்சி மொழி நிலை 1830 ஆம் ஆண்டிலேயே வேகமும் விறுவிறுப்பும் அடையத் தொடங்கியதெனலாம். இந்த ஆண்டில்தான் தாய்மொழியாகிய தமிழ் மூலம் சிறுவர்கட்குப் பாடம் புகட்டும் 'தமிழ் பயிற்சி மொழித் திட்டம்' ஆட்சியாளர்களாலும், கல்வித் துறையினராலும் தொடங்கி வைக்கப்பட்டது. முதல் வகுப்பிலிருந்து எட்டாம் வகுப்பு வரை தமிழே பயிற்சி மொழியாக்கப்பட்டது. அறிவியல் தமிழாக்க முயற்சிகள் மேற்கொள்ளப்பட்ட காலத்தில் அம் முயற்சிக்கு மேலும் வலுவூட்டும் முறையில் 1831 இல் "தமிழ் மேகசின்" எனும் பெயரில் தமிழ் மாத இதழொன்று வெளிவரத் தொடங்கியது. இவ்விதழில் அறிவியல் செய்திகள் பல வெளியிடப்பட்டன. தமிழில் அறிவியலைச் சொல்ல முடியும் என்ற நம்பிக்கை வலுப்பெற இவ் விதழ் வெளியீடு பேருதவியாய் அமைந்ததெனலாம்...

சிமெண்ட் போன்ற சொற்களின் ஒலி பெயர்ப்பில் சிறு சிறு மாறுதல்களோடு வழங்கி வருகின்றன. சான்றாக சிமெண்டை, சாதாரண வழக்கில் படித்தறியா மக்களும் மற்றவர்களும் 'சிமிட்டி' எனச் சிதைவோடு அழைக்கிறார்கள். அதே போன்று 'டிஸ்யூ' என்பதைத் 'திசு' என்று அழைக்கிறோம். இச் சிதைவு, தமிழ்ச் சொற்களைப் போன்ற தோற்றத்தையே கொடுத்து விடுவதால், இத்தகைய சொற்களை அப்படியே பயன்படுத்திக் கொள்வதுதான் சிறப்பாகும்.

**காலம் தேடும் தமிழ் — ஆசிரியர் மணவை முஸ்தபா. விலை ரூ. 25. வெளியீடு 'மீரா பப்ளிகேஷன், AE. 103, அண்ணா நகர், சென்னை 600 040.**

தொகுப்பு: **சுப்ரபாலன்.**

# என்னைப் பெத்த ராசா

பூவும் பொட்டுமிழந்து ஸ்ரீவித்யா தன் மருமாள் ரூபினியுடன் யாரோ ஒரு சண்டியரிடம் அநியாயமாய் விதை நெல்லைக் கூடப்பறிகொடுத்துப் படாத அவஸ்தையெல்லாம் படுகிறாரே ஏன்?

கதாநாயக அந்தஸ்திலிருக்கும் ராமராஜன் சிறைவாசம் அனுபவித்து விட்டு வருகிறாரே அவர் செய்த குற்றம் என்ன?

இப்படி ஆரம்பத்தில் இரண்டு கொக்கிகளை மாட்டி, அதிலே கதையைத் தொங்கவிட்டிருக்கிறார்கள்.

கதை என்னவோ குடிகெடுத்த வில்லனைப் பழிவாங்கும் அண்மைக் காலத்து சினிமா ஃபார்முலாதான்.

கதாநாயகன் ராமராஜன். ஐயோ பாவமாய் முகத்தை வைத்துக் கொள்வதற்குச் சிறப்புப் பரிசு ஒன்று உண்டு என்றால் இன்றைய கதாநாயகர்களில் அதைத் தட்டிக் கொண்டு போகும் தனித் தகுதி ராமராஜனுக்குத்தான்.



யற்றபடி மானாவாரியான சண்டைகளிலாகட்டும்; காதல் கட்டணைப்புக்களிலாகட்டும் அலுத்துப் போன பழம்பாங்குதான்.

இந்த ரூபினிக்கு ஏதோ கொஞ்சம் வாகான மேனி என்பதால் கிளுகிளுப்பு மூட்டுகிறோம் பேர்வழி என்று இந்த அளவுக்குக் கண்ணடித்து அழைப்பு விடும் கொச்சை. எல்லையைத் தொட வேண்டுமா?

கவுண்டமணி — விநுசக்ரவர்த்தியின் மாமன் மச்சான் உறவு. ஒருத்தரை ஒருத்தர் வெட்டுவதும் குத்துவதுமாய் முட்டி மோதிக் கொண்டு அதற்குள்ளேயே ஓர் ஒட்டுறவைக் காட்டியிருக்கும் விதம் இதம்.

ஒரு வித்தியாசமான தாயைக் காட்டும் ஆர்வத்தில், ஜெயில் கொடுமை அனுபவித்து விட்டுத் திரும்பும் மகனிடம் அந்த அளவுக்குக் கடுமை காட்டும் கொடுமைக்காரப் பூச்சு கொடுத்திருக்க வேண்டாம் ஸ்ரீவித்யாவுக்கு. இருந்தாலும் திண்ணையில் படுக்க விட்டு விட்ட மகனை முனி பிடித்துக் கொள்ளுமோ என்ற தவிப்பில் நள்ளிரவில் ஓசைப்படாமல் வெளிவந்து தலைமாட்டில் துடைப்பத்தைப் போட்டு விட்டுப் போகிறாரே அந்தக் கட்டத்தில் முள்தோல் போர்த்த பலாச்சுளைப் பாசத்தைக் காட்டியிருக்கிறார்.

செந்தில் கொஞ்சம் போல் தலைகாட்டினாலும் பழைய நினைப்புடா பேராண்டி என்று கவுண்டமணி கட்டி வைத்து முட்டி மோதிச் செமைத் தாக்கு நடத்தும் போது மனம் விட்டுச் சிரிக்க வைக்கிறார்.

அசல் வில்லன் சீனிவாசன் ஓவர் அழுத்தம்.

வில்லன் கூடவே ஜானி என்று ஒரு பைத்தியம் இருப்பது போல் காட்டி, கடைசியில் அது பைத்தியம் இல்லை என்று பூச் சுற்றியிருந்தாலும் அந்த ஜானி காரெக்டர் மனசைத் தொட்டு, கதையை முடித்து வைப்பதால் குறிப்பிடத்தக்கது தான்.

வெளிப்புற வளம் காட்டும் துல்லிய காமெரா சொல்லும்படி இருக்கிறது.

— பி. எஸ். எஸ்.

# இன்று இறப்பு விழா

16

"மிஸ்டர் கிஷோர்! நான் இன்னும் பத்து நிமிஷத்தில் அங்கே இருப்பேன். விஷயத்தை வெளியே யார்கிட்டேயும் கசிய விடாதீர்கள்" — சொல்லி விட்டு ரிஸீவரை வைக்க, பக்கத்தில் நின்றிருந்த ரூபலா கேட்டாள்.

"என்ன சந்தோஷமான சமாசாரம் போலிருக்கே?"

"ஆமா..."

"என்ன எவனாவது மாட்டிக்கிட்டானா....?"

"ம்....! வாட்ச்மேன் ஹீராலால் வீட்டைக் கண்காணிக்கச் சொன்னது, ஒரு நல்ல ரிசல்ட்டைக் கொடுத்திருக்கு. ஹீராலால் வீட்டையே சுத்திச் சுத்தி வந்துக்கிட்டிருந்த ஒருத்தனை போலீஸ் மடக்கியிருக்காங்க. ஆளைப்பிடிச்சுச் சோதனை போட்டப்போ... ஒரு ரிவால்வர், கழுகு படம் என்கிரேவ் பண்ணின ஒரு கத்தி. ஒரு ஃபாரின் கரன்ஸி நோட்டு..."

ரூபலா குறுக்கிட்டாள்: "ஆக... ஓர் இந்தியக் கழுகு உங்க கையில் மாட்டியிருக்கு..."

"ஆமா... அதனோட ஒவ்வொரு சிறகையும் உருவிக்கிட்டே கேள்விகளைக் கேட்டா... உண்மை வெளியே வந்துடும். இன்னிக்கு ராத்திரி சிவராத்திரிதான்...."

"இப்பவே நீங்க.. புறப்படறீங்களா?"

"ஆமா...."

"பைக்ல... போகாதீங்க.. செக்யூரிடி கார்ட்ஸோட ஜீப்புல போங்க.." ரூபலா கலவரக் குரலில் சொல்ல —

"ம்..." — விவேக் தலையாட்டிக் கொண்டே ஜெர்கின் கோட்டுக்குள் புகுந்தான்.

செக்யூரிடி ஃபோர்ஸ் ஜீப்பில் பந்தோபஸ்தாய் போலீஸ் ஹெட்குவார்ட்டர்ஸ் போய் விவேக் சேர்ந்த போது, நேரம் இரண்டைத்தாண்டியிருந்தது. ஹெட்குவார்ட்டர்ஸ் கட்டடத்தின் முன் பக்கம் இருட்டாய் இருக்க, பின்பக்கம் கொஞ்சம் வெளிச்சமாய்த் தெரிந்தது. ஊமையாகிப் போன வயர்லெஸ் கருவிகளோடு நான்கைந்து பைக்குகள் நின்றிருக்க, கொஞ்சம் தள்ளிச் சிகரெட் புகைக்கும் டிரைவரோடு ஜீப் ஒன்று தெரிந்தது. வேகமாய்ப் போய் நின்ற செக்யூரிட்டி ஜீப்பினின்றும் கீழே இறங்கிய விவேக்கை இன்ஸ்பெக்டர் கிஷோர் எதிர்கொண்டார்.

ராஜேஷ்குமார்

"கம் திஸ் சைட் ஸார்."

அரை இருட்டான வராந்தாவில் வேகமாய் நடந்தார்கள். விவேக் கேட்டான். "பிடிபட்ட ஆள் இந்தியக் கழுகுகள் க்ரூப்பைச் சேர்ந்தவன்தானா...?"

"ஆமா... ஸார்..."

"எப்படி சொல்றீங்க...? அவனே ஒத்துக்கிட்டானா...?"

"இதுவரைக்கும் அவன் வாயைத் திறந்து பேசவேயில்லை ஸார். ஆனால் அவன் வெச்சிருந்த கத்தியில் ஒரு கழுகை... பறக்கிற மாதிரி... என்கிரேவ் பண்ணியிருக்காங்க. அதை வெச்சுத்தான் நான் அந்த முடிவுக்கு வந்தேன்."

"வாட்ச்மேன் ஹீராலாலையும் கொண்டு வந்திருக்கீங்களா?"

"ஆமா... ஸார்."

"அவன் என்ன சொல்றான்?"

"பிடிபட்ட ஆசாமியைக் காட்டி இவனை உனக்குத் தெரியுமான்னு கேட்டேன். தெரியாதுன்னு சொல்லிட்டான்."

"பிடிபட்ட ஆளுக்குப் போலீஸ் சிகிச்சையைக் காட்டினீங்களா?"

"காட்டினோம். ஆள் அசரலை..."

அந்த நீளமான வராந்தா முடிந்து போயிருக்க, ஈரவாசம் அடிக்கும் 'ஆர்ச்' வைத்த அறைக்குள் நுழைந்தார்கள். பனியனும் காக்கி அரை டிராயரும் அணிந்த இரண்டு திடகாத்தரமான போலீஸ் ஆட்களுக்கு நடுவில், அவன் மண்டியிட்டு முழங்கால்களால் நின்றிருந்தான். உடம்பில் ரப்பர் தடி ரூர்க்கமாய் மொத்தியிருக்க, ரத்தம் கருநீலத்தில் கட்டியிருந்தது.

முப்பது வயதுக்குள் இருந்தான். அகலமான முகத்தில் மோவாயும் நாசியும் தூக்கலாய்த் தெரிந்தது. கண்களில் மாட்டிக் கொண்ட ஆத்திரம் மின்னியது. மெல்ல நடந்து சென்ற விவேக் அவனுக்கு வெகு அருகாகப் போய் நின்றான். அவன் விவேக்கை அண்ணாந்து பார்த்து விட்டுத் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டான். விவேக் அவன் தோளைத் தட்டி மெல்லிய குரலில் கேட்டான். "உம் பேரைச் சொல்றியா...?"

"............."

''இந்த மௌனச் சாதிப்பெல்லாம் பிரயோஜனப்படாது ப்ரதர். ஹீராலால் வீட்டை எதுக்காகச் சுத்தி வந்தே?''

அவன் தொடர்ந்து மௌனம் சாதிக்கவே விவேக் அங்கிருந்த ஒரு ஸ்டூலை எடுத்துப் போட்டுக் கொண்டு அவனுக்கு எதிரே உட்கார்ந்தான்.

''நீ சார்ந்திருக்கிற குழுவைக் காட்டிக் கொடுக்க உன்னோட மனசு இடம் கொடுக்காதுதான். ஆனா ஒரே ஒரு விஷயத்தை மட்டும் நினைச்சுப் பாரு. இந்தியக் கழுகுகள் என்கிற பேர்ல நீங்க செய்த கொலைகள் நியாயம்தானா? நினைச்ச நேரத்துல ஒரு பார்லிமெண்ட்டைக் கன்லக்க முடியுமா? உலக நாடுகள் முழுதும் கலந்துக்கிற ஓர் ஒலிம்பிக் போட்டியை நாம் பகிஷ்காரம் பண்ணி... மற்ற நாடுகளோட பகையை இந்தியா தேடிக்கிறது தேவைதானா...?''

விவேக் சொல்ல— அவன் பளிச்சென்று தலையை உயர்த்திக் கண்கள் இடுங்க முறைத்தான். விவேக் புன்னகை செய்தான்.

''கொஞ்சம் காரமாச் சொல்லிட்டேன் போலிருக்கு.''

அவன் பார்வையை மறுபடியும் தாழ்த்த, விவேக் கையிலிருந்த லத்தியால் அவன் முகத்தை நிமிர்த்தினான். மறுபடியும் கேட்டான்.

''உம்பேரென்ன...?''

''...........''

இஷோர் பின்பக்கம் நின்று குரல் கொடுத்தார். ''அவன் வாயைத் திறக்க மாட்டான் ஸார். ட்ரீட்மெண்ட்டோட அடுத்த கட்டத்துக்குப் போனாத்தான் இவன் வாயைத் திறப்பான்.''

''சரி.... அந்த ஃபிங்கர் டைனமைட் ட்ரீட்மெண்ட்டைக் குடுங்க இஷோர். சரிப்பட்டு வர்றானான்னு பார்க்கலாம்.''

''எஸ்... ஸார்.''

இஷோர் நகர, விவேக் அவன் முகத்தை மறுபடியும் லத்தியால் நிமிர்த்தினான். ''ஃபிங்கர் டைனமைட் ட்ரீட்மெண்ட்னா என்னான்னு உனக்குத் தெரியாது. சொல்றேன் கேட்டுக்கோ...! உன்னோட பீச்





சாங்கை உள்ளங்கைக்குள்ளே சின்ன ஜெலாடின் டைனமைட்டை வெச்சுக் கட்டிருவோம். ஜெலாடின் டைனமைட் சிவகாசி லக்ஷ்மி வெடி சைஸ்லதான் இருக்கும். டைனமைட்டை ஃபிக்ஸ் பண்ணி, கையை மட்டும் தனியா இழுத்து வெச்சு, அந்த தூணுக்குக் கட்டிடுவோம். நாங்க எல்லாரும் ரூமை விட்டு வெளியே போய், அந்த ஜன்னல் வழியே உன்னையே பார்த்திட்டிருப்போம். சரியா அஞ்சு நிமிஷம் கழிச்சு அந்த டைனமைட் வெடிக்கும். அஞ்சு விரலும் அஞ்சு திசையில சிதறும். ஆனா நீ சாகமாட்டே.''

அவன் கண்கள் முதல் தடவையாய் மிரண்டது. விவேக் அதைக் கவனித்து விட்டுத் தொடர்ந்தான்.

''அஞ்சு விரலும் சிதறின அந்தக் கைக்கு மருந்து போட்டுக் கட்டுக் கட்டின பின்னாடி, உன்னோட இன்னொரு கைக்கும் அதே மாதிரி டைனமைட்டைப் ஃபிக்ஸ் பண்ணுவோம்.''

அவன் கண்கள் மறுபடியும் மிரட்சிக்குப் போனது. விவேக் அதைக் கண்டு கொள்ளாமல் தொடர்ந்தான்.

''குற்றவாளிகள்கிட்டேயிருந்து உண்மையை வரவழைக்கிறதுக்காக ஸ்காட் போலீஸ் செய்யற ட்ரீட்மெண்ட்ல இது முக்கியமான ஒண்ணு. இந்த ட்ரீட்மெண்ட் கை விரல்களோடு நின்னுடும்ன்னு எதிர்பார்க்காதே! இந்த மரியாதை கால் விரல்களுக்கும் நடக்கும்.''

''நோ...'' — முதல் தடவையாய் ஒரு வார்த்தை அவன் வாய்க்குள்ளிருந்து இடறியபடி வந்தது.

''அப்ப உண்மையைச் சொல்லு! உம் பேரென்ன...?''

அவன் மௌனிக்க —

இஷோர் ஒரு நீளமான ஒயரோடும் சின்ன டைனமைட் சமாசாரத்தோடும் உள்ளே வந்தார். கான்ஸ்டபிள் ஒருவர் வேகமாய்ப் போய் அவனுடைய இடது கையைப் பிடித்தார். அவன் திமிறினான்.

''வே... வேண்டாம்...''

''அது வேண்டாம்ன்னா... உண்மைகளை மடமடன்னு சொல்லணும். இல்லேன்னா... கையில பத்து.. கால்ல... பத்து.. மொத்தம் இருபது விரல் அநியாயத்துக்கு நஷ்டமாயிடும்...''

''சொ... சொல்றேன்''

''குட்.. உம்பேரென்ன...?''

''ச... சம்பக் லால்...''

''நீ இந்தியக் கழுகுதானே...?''

''ஆ...மா...''

''குழுவுல மொத்தம் எத்தனை பேர்...?''

''இ... இருபத்து மூணு பேர்...''

''வாட்ச்மேன் ஹீராலால் வீட்டை எதுக்காகச் சுத்திச் சுத்தி வந்தே...? அவனைக் கொல்லத்தானே...?''

''ஆ...மா...''

''காரணம்...?''

''எங்க ஆட்கள்ல ஒருத்தனை ஹீராலால் அடையாளம் கண்டுக்கிட்டான். எந்த சந்தர்ப்பத்திலாவது அவன் காட்டிக் குடுத்துடுவானோன்னு பயந்தோம்...''

''சரி... இந்த... இந்தியக் கழுகுகளுக்கு பாஸ்... யாரு?''

இந்த... கேள்விக்கு அவன் தலையைக் குனிந்து கொள்ள, விவேக் லத்தியால் அவன் தாடையைத் தூக்கினான்.

''இனிமேத்தான் நான் முக்கியமான கேள்விகளுக்கு வரப் போறேன். சொல்லு.. உன்னையெல்லாம் இப்படி வளர்த்த காட்ஃபாதர் யாரு...?''

''வ... வ... வந்து...''

''நோ....! சொல்லரதே சம்பக்...!'' — வீறிட்டுக் கொண்டு அறை வாசலில் செண்ட்ரிக்கு நின்றிருந்த கான்ஸ்டபிள் ஒருவன் நீண்ட ரைஃபிளை உயர்த்திக் கொண்டு அறைக்குள் நுழைந்தான் வேகமாய்.

மற்றவர்கள் சுதாரித்து நிமிர்வதற்குள் கான்ஸ்டபிளின் கையிலிருந்த —

ரைஃபிள் இரண்டு முறை கனைக்க —



''சம்பளப் பணத்தைத் தன்கிட்டதான் கொடுக்கணும்னு என்னோட அம்மாவும் மனைவியும் நச்சரிச்சாங்க. அதுக்கு ஒரு வழி கண்டுபிடிச்சிட்டேன்...''

''என்னது...?''

''சம்பளப் பணத்தை அம்மாகிட்டேயும், லஞ்சப் பணத்தை மனைவிகிட்டேயும் கொடுத்துடுவேன்...!''

— ரம்யசேகர்.

சம்பக்லால் உடம்பின் முக்கிய கேந்திரங்களில் தோட்டாக்களை வாங்கிக் கொண்டு, ரத்தச் சிதறலாய்ப் பின்பக்கமாய் மல்லாந்தான்.

''காட்ச் ஹிம்..''

விவேக் கத்திக் கொண்டே எழ—

கான்ஸ்டபிள் ரைஃபிளைப் 'பனிச்' சென்று விவேக் பக்கமாய்த் திருப்பினான். இந்தியில் கத்தினான்: ''இந்தியக் கழுகுகள் வாழ்க! அவர்களின் உன்னத லட்சியம் நிறைவேறட்டும். அந்த லட்சியத்திற்குக் குறுக்கே யார் வந்தாலும் அவர்கள் ரத்தம் சிந்தட்டும்.''

கத்திக் கொண்டே சுட்டான்.

விவேக் விநாடிக்கும் குறைவான நேரத்தில், அருகே இருந்த ஸ்டூலை எடுத்து, அந்த தோட்டாவைத் தடுத்தான். தோட்டா சிதறி மேற்கூரையைப் பெயர்த்தது.

''கிஷோர்... காட்ச் ஹிம்.''

ஸ்தம்பித்துப் போயிருந்த கிஷோரும் பக்கவாட்டிலிருந்து பாய, அவன் ரைஃபிளைத் தாறுமாறாய்ச் சுற்றிச் சுட ஆரம்பித்தான். அறையின் சுவர்களில் செங்கற்கள் சிமெண்ட்டோடு பெயர்ந்து விழ, ஒரு கான்ஸ்டபிள் தோள் பட்டையில் தோட்டாவை வாங்கிக் கொண்டு சுருண்டார்.

''ஏய்... பகதூர்! ரைஃபிளைக் கீழே போடு...''

கிஷோர் கத்த—

அந்த பகதூர் வெறிபிடித்தவன் மாதிரி சிரித்தான். ''போட மாட்டேன். உங்க எல்லாரையும் தீர்த்துக் கட்டிட்டு நானும் தற்கொலை பண்ணிக்கப் போறேன். இந்தியக் கழுகுகளோட லட்சியம் நிறைவேறுகிற வரைக்கும் அவங்களை நீங்க கண்டுபிடிக்கவே முடியாது. வாழ்க... இந்தியக் கழுகுகள்!''

பகதூர் சிரித்து ரைஃபிளை கிஷோரின் மார்புக்குக் குறிபார்த்து ட்ரிக்கரைச் சுண்டினான். விசை விடுபட்டுப் பின்னோக்கிப் போக—

'க்ளிக்.'

வயிறு காலியான ரைஃபிள்.

கண்டபடி சுட்டதில் அத்தனை தோட்டாவும் காலாவதியாகியிருக்க ரைஃபிள் பெருமூச்சு விட்டது.

ஒரே விநாடிதான்—

செண்ட்ரி பகதூர் அந்த ரைஃபிளைத் தூக்கி எறிந்தான். இடுப்பின் மறைவில் பதுக்கியிருந்த அந்த 'S' மாதிரி வ ளை வு காட்டிய... கத்தியை உருவி, மேலே உயர்த்தி நாற்பத்தைந்து டிகிரி கோணச் சாய்வாகக் கூர்முனையைத் தாழ்த்தி—

விருட்டென்று காற்றில் இறக்கி—

அடிவயிற்றில் சொருகிக் கொண்டு குபுக்கென்று ரத்தம் காட்டிக் கண்கள் ஸ்தம்பித்து, 'இந்தியக் கழுகுகள் வாழ்க!' என்று இந்தியில் சொல்லி, முன் பக்கமாய்ச் சுருண்டான். விவேக் அவனை நோக்கி ஓடினான்.

(தொடரும்)



ஆசிரியர்: ''அவன் உன்னை 'பிளேடு'ன்னு திட்டிட்டாத்தான் என்ன? அதுக்காக இவ்வளவு கோபப்பட்டு அடிதடி சண்டையிலே நீ இறங்கணுமா?''

மாணவன்: ''சாதாரண 'பிளேடு'ன்னு திட்டினாக் கூடப் பரவாயில்லே சார்..! 'ட்வின்' பிளேடுன்னு இல்லே திட்டறான்!''

— மேல்பட்டி வெங்கடேஸ்வரன்.



''தளபதிக்கு எதுக்குப் பாராட்டு விழா நடத்துறாங்க?''

''போரில் அவர் மட்டும் எப்படியோ தப்பிப் பிழைத்து வந்து இருக்கிறாராம்!''

— கடுவை. கோபால்சாமி.



சர்வர்: ''காப்பி கொஞ்சம் தண்ணிதான். ஒத்துக்கிறேன். அதுக்காக, அதிலே, 'கப்பல்' செஞ்சு விடறீங்களே...? இது தேவையா?''

— ஆர். வசந்தகுமார்.

# நான் போகும் பாதை

'மச்சானுக்குப் பொளைக்கத் தெரியாது.' இது மயில்சாமியின் கருத்து. மாமன் போகிற போக்கு மகாமட்டம். இது சிங்காரவேலின் தீர்மானம்.

வள்ளிக்கு இருவர் கண்ணோட்டத்திலும் ஒவ்வொரு சமயம் நியாயம் தட்டுப்படும்.

''என்னதான் இவுரு பெரிசா தமிழைக் கரைச்சுக் குடிச்சிருந்தாலும் அதிகாரிங்க எழுதிக் கொடுத்ததைக் கம்போஸ் பண்ண 'வேண்டியவர்தானே! இவுரு பெரிய புலவர் மாதிரி அவங்களுக்கு ஏன் பாடம் சொல்லப் போவணும்? லடாய் முத்தணும்? அப்புறம் கெடைக்காத கவர்ன்மெண்ட் பிரஸ்' வேலைக்கு ராஜினாமாக் கொடுக்கணும்... இப்ப அச்சாபீஸ் அச்சாபீஸா வாரக் கூலிக்கு அலையணும்?''

அந்த இடத்தில் மயில்சாமி பிடித்தால் அண்ணன் சொல்வது நூறு சதம் உண்மை என்று வள்ளிக்குப் படும்.

''இவனெல்லாம் புத்தி சொல்ற தலைவிதியாடி எனக்கு? இவன் ஈ. பி. யிலே இஞ்சினியருக்குச் சலாம் போடுவான். லைன்மேன் கிட்டே ஜபர்தஸ்த் பண்ணுவான். லட்சாதிபதி கரண்ட் திருடினா கண்டுக்க மாட்டான்; பக்ஷீஸ் வாங்கிட்டுப் பல்லைக் காட்டுவான். அன்னப்பரதேசி எவனாவது ஒரு அவுட்டர் கனெக்ஷன் எடுத்தா சத்திய கீர்த்தியாட்டம் கார்வார் பண்ணுவான்... கஸ்டமர் கிட்டே ஃபைனான்ஸ் பொரட்டுவான்.''

தன் கணவன் சிங்காரவேல் பொங்கிக் குமுறினால் அவன் பேசுவது நியாயம் என்று படும்.

வள்ளி அப்பாவியல்ல. இங்கிலீஷில் நாலு எழுத்து வாசிக்கவும் பேசவும் தெரிந்தவள். கணவன் கொண்டு வருகிற காசில் செட்டாகக் குடும்பம் நடத்த அறிந்தவள். வம்பு தும்புகளுக்குப் போகாதவள். வந்த சண்டையை விடமாட்டாள். நியாயத்தின் பக்கம் எப்போதும் நிற்கிற சுபாவம். எனினும் கொஞ்சம் நீக்குப் போக்கோடு கணவன் நடக்கலாம். இன்னும் நேர்மை உணர்வோடு அண்ணன் இருக்கலாம் என்று இருவருக்கும் மத்தியில் ஒரு பாதைப் பாலம் போட்டு அவள் போய்க் கொண்டிருந்தாள்.

''ஆம்பளைங்க இப்படித்தான்! நியாயம் நேர்மைன்னு ஏமாளித்தனமா எதையாவது பிடிச்சுக்கிட்டுத் தொங்குவாங்க. நீ பொம்பளைதானே! ஏழு வருஷம் கவர்ன்மெண்ட் பிரஸ்லே வேலை பார்த்தாரே அண்ணாத்தே! அரைச் சவரன்ல மோதிரம் உண்டா? ஆயிரத்துக்கு வித்துது பவுனு. அப்பவே தலைப்பாடா அடிச்சுக்கிட்டேன்... 'ஒரு சைனு பண்ணிக்க... ரெண்டு வளையல் பண்ணி வையி'ன்னு. நீ கேக்கலே. ஆம்பளைங்க இன்னிக்கு ஒண்ணு பேசுவாங்க... நாளைக்கி ஒண்ணு பேசுவாங்க. அவங்க வாயையே பார்த்துக்கினு இருந்தா நம்ம கதி அதோகதிதான்...''

இது செண்பகம். வள்ளியின் அண்ணி. அவள்தான் அண்ணன் மயில்சாமிக்குத் திருப்புமுனை. அவள் வந்த பிறகுதான் மயில்சாமி வளசரவாக்கத்தில் ஒரு பிளாட்டும், வேளச்சேரியில் ஒரு பிளாட்டும் வாங்கினான்.

இரட்டை வடச் சங்கிலி, நெக்லஸ் என்று தொடங்கி மிக்ஸி கிரைண்டர் என, வீட்டில் நிரப்பி விட்டாள்.

வள்ளி பிறந்த வீட்டிலிருந்து போட்டுக் கொண்டு வந்த நகைகளோ ஒவ்வொன்றாகப் பாங்கிற்குப் படையெடுத்துக் கொண்டிருந்தன.

அச்சமயங்களில் செண்பகத்தின் வாதமும் வள்ளிக்குச் சரிதான் என்று படும். ஆனால் அது நிலையான கருத்தல்ல.

மைனர் மாதிரி ஹேர் டை. கூலிங் கிளாஸ். தளுக்குப் பேச்சு. பகட்டுச் சிரிப்பு. ஆடம்பர உடை. எடுத்தெறிந்த தோரணை. இவையெல்லாம் செண்பகம் வருமுன் மயில்சாமியிடம் இருந்ததில்லை.

பளிங்குப்பாறையில் ஓடிய காட்டருவி மாதிரி நிஷ்களங்கமாய் இருந்தவன் மயில்சாமி. வெளிச்சம் போட்டுப் பிழைக்கத் தேவையான மலினங்கள் அன்று அவனுக்கு அந்நியம்.

காலம் எல்லாவற்றையும் மாற்றுகிறது. தானாக மாறுவது வேறு; ஒரு பெண்ணால் மாற்றப்படுவது வேறு. மயில்சாமியின் மீது செண்பகத்தின் ஆதிக்கம் வலுப்பெற்ற போது வள்ளி வருத்தப்பட்டாள்.

அண்ணன் ஓஹோவென்று பிழைப்பதில் அவளுக்குத் துளியும் வயிற்றெரிச்சல் இல்லை. ஆனால் புனிதமானது எதுவாவது சிறுகச் சிறுகப் பூமியிலிருந்து விடைபெறுவதில் தோன்றும் வருத்தம் அது.

தெருக் குழாயில்தண்ணீர்பிடிக்கும்போது க்யூ வரிசைச் சிநேகிதி சத்யாதான் அடிக்கடி வாயைக் கிளறுவாள்.

''எத்தினி காலத்துக்கு இப்படி 'லோல்' படப் போறே அக்கா?''

வையவன்

## அருள்வாக்கு



ஏதேதோ தெரிந்து கொள்கிறோம் — ஹிஸ்டரி, ஜாகரபி, அடாமிக் ஸயன்ஸ், எலெக்ட்ரானிக்ஸ் என்று என்னென்னவோ தெரிந்து கொள்கிறோம். பலவிதமான உண்மைகளைத் தெரிந்து கொள்வதுதான் மநுஷ்யனாகப் பிறந்ததற்குப் பயன். இப்படி அநேக கலைகள், விஞ்ஞானங்கள் தெரிந்து கொள்கிறோம். நமக்கு இன்பத்தைத் தரும் உபகரணங்களை உண்டாக்கிக் கொள்வதற்காகவும் இப்படி அறிவினால் ''ஸர்ச்'' (தேடுவது) 'ரிஸர்ச்' (ஆராய்ச்சி செய்வது) எல்லாம் செய்கிறோம். ஆனால் கடைசியில் பார்த்தால், இவற்றால் நம்மை மஹா புத்திசாலிகளாக நினைத்துக் கொண்டிருக்கிற நமக்கு ரொம்பவும் அவமானமாக, நம் அத்தனை புத்திசாலித்தனத்தையும் அசடாக்குவதாக ஒன்று தெரிகிறது. அதாவது உண்மை உண்மை என்று நினைத்து நாம் தேடிப் போன எல்லாவற்றையும் எந்த மனஸினால் தேடினோமோ, எந்த மனஸின் திருப்திக்காகத் தேடினோமோ, எந்த மனஸினால் உண்மைகள் என்று அவற்றைத் தெரிந்து கொண்டோமோ அந்த மனஸே உண்மையில்லை, அது உண்மையான 'நாம்' இல்லை என்று தெரிகிறது. (மனஸ் என்பதை இங்கே புத்தியையும் உள்ளடக்கியதான அந்த ஃகரணம் என்ற அர்த்தத்திலேயே சொல்லிக் கொண்டு போகிறேன்.) நம்முடைய ப்ரமாதமான ஸர்ச், ரிஸர்ச்சுகள் நம்முடைய ஸந்தோஷத்துக்கான உபகரணங்களைப் பெருக்கிக் கொள்வதிலே முடிகிறது என்பதும் இப்போது அசட்டுத்தனமாகிறது. ஏனென்றால் இங்கேநாம் சொல்கிற ஸந்தோஷமும் மனஸின் சந்தோஷம்தானே? நிஜமாக நாமாக இல்லாத ஒன்றின் ஸந்தோஷத்துக்கான உபகரணங்களை உண்டாக்கிக் கொள்வதற்காகவே நாம் இத்தனை பாடுபடுகிறோம் என்றால் அது கொஞ்சங்கூட புத்திசாலித்தனமாகாது தானே? நிஜ ஆசாமியைத் தெரிந்து கொள்ளாமல் அவனுக்குச் செய்ய வேண்டியதைச் செய்யாமல், வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறவனை நிஜ ஆசாமியாக நினைத்துக் கொண்டு அவனுடைய அநுபோகங்களுக்காக நாம் ஸதா ஸர்வதா எதையாவது பண்ணிக் கொண்டு உபத்திரவப்படுகிறோமென்றால் இது ரொம்பவும் துக்கப்பட வேண்டிய விஷயம்தானே? பொய்யைப் போஷிக்கவா இந்தப் பாடு? இப்படி ஏமாந்தல்லவா போயிருக்கிறோம்? இனிமேலாவது மெய்யறிவு பெற வேண்டாமா?

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

''என்னிக்குமே நான் வேலை படலே. படப் போறதும் இல்லே.''

''இந்த வீம்பை உட மாட்டியே.''

''இது வீம்பு இல்லே சத்யா. கஷ்டப்படறவங்களுக்கும் ஒரு சந்தோஷம் இருக்கு. சந்தோஷப்படறவங்களுக்கும் ஒரு கஷ்டம் இருக்கு.''

''ஒங்க அண்ணி முண்டியடிச்சு முன்னுக்குப் போய்க்கிட்டிருக்கா. நீ இப்படி தத்துவம் பேசிக்கிட்டிருக்கே!''

''அது அவ பாதை. இது என் பாதை... எல்லாத்தையும் வச்சுக்கிட்டு அதைப் பத்திரப்படுத்திக்க அவ படற பாடும் அலையற அலைச்சலும் எனக்கில்லே தெரியும்?''

வள்ளி அவ்வளவுதான் சொல்வாள். மயில்சாமி என்ற மனிதன் ஒருவன் தூய்மை யிழந்து போன நஷ்டத்தை யாருக்குச் சொல்லி அவள் உணர்த்த முடியும்?

''ஒன்னை மாத்த முடியாதுக்கா.''

''யாரைத்தான் யாரு மாத்த முடியுது சத்யா?''

அடித்துப் பிடித்து முன்னேறு. முண்டி முரண்டிப் போராடு என்று அடிக்கு அடி நொடிக்கு நொடி நிர்ப்பந்தங்கள் அவளை உந்தும் போதெல்லாம் வள்ளிக்கு ஏதோ ஒரு தபஸில் உட்கார்ந்த மாதிரி நினைப்பு வரும்.

என்ன தவம் அது? எதற்காக, எந்த வேட்கை பூர்த்தியாக? அது தெரியாது. போக வேண்டிய பாதை மட்டும் நிச்சயமாயிருந்தது. கைமாற்று, கடன், பிள்ளைகள் உபத்திரவம், நோய் நொடி, உறவினருக்குச் செய்ய வேண்டியது, கணவன் பிடிவாதம், பற்றாக்குறை என்று எல்லா இடுபறிகளுக்கு மிடையில் நிச்சலனமாக நிலைதிரியாமல் ஒரு பாதை ஓடுகிறது. யார் சமைத்த பாதை?

அதுவும் தெரியாது.

அந்தப் பாதையில்தான் நான் ஓட வேண்டும். என் பாதையில் நான் ஓடும் ஒரே நிம்மதிக்காக. அம்மம்மா என்ன நிம்மதி அது... எத்தனை சுகம் அதில்! அது புரிந்து அதைப் பறித்துக்கலைக்கத்தான் இப்படிச் சோதனை வருகிறதோ! இவளிடம் இதெல்லாம் ஒங்காது; எதற்கும் முயற்சி செய்யலாம் என்று தான் அந்தச் சோதனைகள் அவநம்பிக்கையோடு வருகின்றன. தோற்கின்றன. முயல்கின்றன; தோற்கின்றன.

**அ**ன்று காலை அது மீண்டும் மயில்சாமி வடிவில் வந்தது.

சாப்பாட்டுக் கடையை ஏறக்கட்டிப் பாத்திரங்களையெல்லாம் அலம்பி முடித்து, சலவைத் தூளில் முங்கி வைத்திருந்த துணிகளை வெளுக்க அவள் கிணற்றடியில் நின்றிருந்தாள்.

ஸ்கூட்டரை நடையில் ஏற்றிவிட்டு ''வள்ளி... வள்ளி!'' என்று அவசரத்தோடு அண்ணன் கூப்பிடும் குரல் கேட்டுக் கைத் துணியைப் போட்டுவிட்டு, ''இதோ வர்றேண்ணா'' என்று நடைக்கு ஓடினாள் வள்ளி. அவள் நின்றதும் நிற்காததுமாக அவன் கத்தினான்.

''மச்சான் என்ன வேலை பண்ணியிருக்கு தெரியுமா?''

ஒரு புதிய தாக்குதலுக்கு அவள் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டாள்.

''என்ன?''

''வேலைக்குப் போன பிரஸ்ஸுக்கு வெளியே எவனையோ போட்டு அடி அடின்னு அடிச்சதால ஸ்டேஷனுக்குத் தள்ளிக்கிட்டுப் போய்ட்டாங்க!''

தன்னைச் சமாளிக்கத் தொண்டையைக் கூட்டி விழுங்கினாள் வள்ளி.

''எதுக்காக அண்ணா?''

''எல்லாம் வழக்கப்படி. துஷ்டநிக்ரக சிஷ்ட பரிபாலனம்.'' — அதிர்ச்சிக்கு மத்தியிலும் அவன் இளக்காரம் குறையவில்லை.

''புரியறாப்பல சொல்லேன்.''

''எவனோ ஒரு செக்ஸ் புத்தகத்தைக் கம்போஸ் பண்ணச் சொன்னானாம். இரட்டைக் கூலி தர்றேன்னான். அதுக்கு வேற ஆளைப் பாருன்னுட்டாரு இந்த மகாத்மா. அதோட விட்டுறவேண்டியதுதானே! அவன் அதே பிரஸ்ஸில இவரு பக்கத்திலே வேலை செஞ்சிட்டிருந்தானாம் ஒரு பதினெட்டு வயசுப் பையன். அவனைப் புடிச்சிருக்கான் வந்தவன். நாலு காசு கூட வருதுன்னு பையன் சபலப்பட்டிருக்கான். நியாயந் தானே...'' என்று வள்ளியின் ஆமோதிப்பிற்காக நிறுத்தினான் மயில்சாமி.

வள்ளி பதறவில்லை. வார்த்தை விடவுமில்லை.

''அப்புறம்...?'' என்று தவிர்த்தாள்.

அந்தச் சிறு இடைவெளியில் இவள் இப்படி இருப்பதால்தான் அவன் அப்படி இருக்கிறான் என்று ஒரு கணம் செண்பக மகாத்மியம் சொல்லிக் கொண்டு இளக்காரத்தைத் தொடர்ந்தான் மயில்சாமி.

''இவுரு பையனைத் தடுத்துப் பார்த்திருக்காரு. பச்சை நோட்டைப் பார்த்ததும் பையன் மயங்கி ராவோட ராவா வேற ஏதோ ஓர் அண்டர்கிரவுண்டு பிரஸ்ஸிலே கம்போஸ் பண்ணிக் குடுத்துட்டான்.''

இன்னும் செய்தி பாக்கியிருந்தது. வள்ளி மன உறுதியை வருவித்துக் கொண்டாள்.

''அடிச்சுப் புஸ்தகமாக்கிட்டு வந்து இப்ப என்ன சொல்றேன்னு மொகத்துக்கு எதிரே அவன் புஸ்தகத்தை ஆட்டிக் கேட்டிருக்கான். நீ செஞ்சியாடான்னு இவுரு பையனைக் கேட்டிருக்காரு. அவன் இவர் கோபத்துக்குப் பயந்து தலையாட்டிட்டான்.''

''அப்புறம்?''

''இவுரு பையனைத் தெருவிலே வலிச்சிக்கினு போய் ஓர் அறை விட்டிருக்கார். புஸ்தகம் போட்டவன் ஒனக்குப் பொளைக்கத் தெரியலேன்னா அவனை ஏண்டா அடிக்கறேன்னு கேட்டிருக்கான். இந்தப் பால் மனசைப் பாழாக்கிட்டியேடான்னு இவுரு புகுந்து வெளையாடிட்டாரு. அவன் கிட்டே காசு இருக்கு. ஸ்டேஷனுக்குப் போயிட்டான்.''

மயில்சாமி திருப்பிச் சொன்ன ஒரு சொல் அவளுக்குள் சுரீரென்று விழுந்தது. பால் மனசு. அது நிச்சயம் கணவன் சிங்காரவேலின் வார்த்தைகள்தான். ஏதோ ஒரு மூலையில் அவளுக்குத் திருப்தி தந்தது.

''ஜாமீன்ல விட்டுடுவாங்களாண்ணா?''

''ரெண்டு நாள் லாக்கப்பிலே வச்சிருக்க அவன் ஏற்பாடு பண்ணியிருக்கான்.''

''நீ போய்க் கேட்டியா அண்ணா?''

''விடமாட்டேன்னுட்டானேம்மா.''

''எந்த ஸ்டேஷன்?''

அவன் ஸ்டேஷன் பெயர் சொன்னான்.

''நான் லாயரைப் போய்ப் பார்க்கிறேன். அவரு கோர்ட்டுக்குப் போய்ட்டாரோ என்னவோ? இதெல்லாம் எதுக்கு வீண் வம்பு? நமக்கென்ன வந்ததுன்னு நகர்ந்துக்க வேண்டியதுதானே! நமக்குப் பொளைக்கத் தெரியாது; விட்டுடு. எவனோ எப்படியோ பொளைச்சுக்கிட்டுப் போறான். அவங்கிட்டே பொல்லாப்பு வச்சுக்கிட்டுத் தான் கெடறதுமில்லாமே, மத்தவங்களுக்கும் ஸ்டேஷன், வக்கீல்னு தொல்லை கொடுத்துக்கிட்டு... நீ சரியில்லேம்மா!''

மயில்சாமியைத் தீர்க்கமாகப் பார்த்தாள்... ஒரு பார்வையில் அவன் பூர்வாசிரமத்தை நினைவுறுத்துகிற முயற்சியோடு! அவன் தலையைத் திருப்பிக் கொண்டான்.

''நான் லாயர்கிட்டே போய்ட்டு வர்றேம்மா!''

''ம்ம்.''

அவன் ஸ்கூட்டரைத் தள்ளிக் கொண்டு வெளியேறினான்.

ஒருகணம் நடையில் நின்றாள் வள்ளி. வருத்தமோ கவலையோ, பயமோ வரவில்லை. என்ன செய்யலாம் என்றுதான் யோசித்தாள்.

தலையைச் சீவிக் கொண்டு புடைவை மாற்றினாள். வெளியே வந்து கதவைப் பூட்டினாள். சாவியை இடுப்பில் செருகிக் கொண்டு விறுவிறுவென்று பஸ் ஸ்டாப்பிற்கு நடந்தாள். வழியில் எண்ணங்கள் இளைத்தன.

'ஆபாசத்தை அனுமதிக்கிற அநியாயம் நடந்துக்கிட்டிருக்கு. நமக்கென்ன நமக்கென்னன்னு எல்லாம் போய்ட்டிருக்காங்க. இவுரு கண்டிச்சுத் தட்டிக் கேட்டிருக்காரு. அது தெரியாமே ஸ்டேஷன்ல பிடிச்சிருக்காங்க... விட்டுடுவாங்க. போய்ப் பார்ப்போம். ஸ்டேஷன்ல மட்டும் மனுஷன் இல்லையா? அவங்களுக்கு மனச்சாட்சி இல்லியா...? அதையும் பார்ப்போம். இது என் பாதை. விட முடியாது.'




அத்தியாயம் 21

## பல்லக்கு ஏறும் பாக்கியம்

அந்த ஆண்டில் வழக்கமாக மாரிக்காலம் ஆரம்பிக்க வேண்டிய காலத்தில் ஆரம்பிக்கவில்லை. இரண்டு தடவை மழை தொடங்குவது போல் தொடங்கிச் சட்டென்று நின்று விட்டது.

காவேரி ஆற்றிலும் அதன் கிளை நதிகளிலும் தண்ணீர்ப் பிரவாகம் வர வரக் குறைந்து வந்தது.

புது நடவு நட்ட வயல்களுக்குத் தண்ணீர் வரத்து இல்லாமல் பயிர்கள் வாடத் தொடங்கின.

''எல்லாம் வால் நட்சத்திரத்தினால் வந்த விபத்து!'' என்று மக்கள் பேசிக் கொள்ளலானார்கள்.

''நாட்டுக்கு எல்லா விதத்திலும் பீடை வரும் போலத் தோன்றுகிறது! இராஜ்ய காரியங்களில் குழப்பம்; இளவரசரைப் பற்றித் தகவல் இல்லை; அதற்கு மேல் வானமும் ஏமாற்றி விடும் போலிருக்கிறது'' என்பவை போன்ற பேச்சுக்களை வழி நெடுகிலும் சேந்தன் அமுதனும் பூங்குழலியும் கேட்டுக் கொண்டே வந்தார்கள்.

மழை பெய்யாமலிருந்தது அவர்களுடைய பிரயாணத்துக்கு என்னவோ சௌகரியமாகத்தானிருந்தது.

அன்று காலையிலிருந்து வெயில் சுளீர் என்று அடித்தது. பிற்பகலில் தாங்க முடியாத புழுக்கமாயிருந்தது. இராஜபாட்டையில் மரங்களின் குளிர்ந்த நிழலில் சென்ற போதே அவர்களுக்கு வியர்த்துக் கொட்டியது.

''இது ஐப்பசி மாதமாகவே தோன்றவில்லையே? வைகாசிக் கோடை மாதிரியல்லவா இருக்கிறது?'' என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டு போனார்கள்.

பழுவேட்டரையரின் அரண்மனைப் பல்லக்கு அவர்களைத் தாண்டிச்சென்றசிறிது நேரத்திற்குப் பிறகு திடீரென்று குளிர்ந்த காற்று வீசத் தொடங்கியது.

சாலை மரங்களின் இலைகள் காற்றில் அசைந்தாடிச் சலசலவென்ற சத்தத்தை உண்டாக்கின.

வடகிழக்குத் திக்கில் இருண்டு வரு

வது போலத் தோன்றியது.

வானத்தின் அடிமுகட்டில் இருண்ட மேகத் திரள்கள் தலைகாட்டின.

சிறிது நேரத்துக்குள்ளே அந்த மேகக் கூட்டங்கள் யானை மந்தை மதங்கொண்டு ஓடிவருவது போல் வானத்தில் மோதி அடித்துக் கொண்டு மேலே மேலே வரலாயின.

இளங்காற்று பெருங் காற்றாக மாறியது. பெருங் காற்றில் சிறிய மழைத் துளிகள் சீறிக் கொண்டு வந்து விழுந்தன.

சிறு தூற்றல் விழத் தொடங்கிக் கால் நாழிகை நேரத்தில் 'சோ' என்ற இரைச்சலுடன் பெருமழை கொட்டலாயிற்று.

காற்றிலும் மழையிலும் சாலை ஓரத்து விருட்சங்கள் பட்ட பாட்டைச் சொல்லி முடியாது. சடசடவென்று மரக்கிளைகள் முறிந்து விழத் தொடங்கின. அப்போது அவற்றில் அடைக்கலம் புகுந்திருந்த பட்சிகள் கீச்சிட்டுக் கொண்டு நாலா திசைகளிலும் பறந்தோடின.

சாலையில் போய்க் கொண்டிருந்த ஜனங்களும் நாலாபுறமும் சிதறி ஓடினார்கள்.

காற்று மழையிலிருந்து தப்புவதற்காகச் சிலர் ஓடினார்கள். மரக்கிளைகள் தலையில் விழுந்து சாக நேரிடுமோ என்ற பயத்தினால் மற்றவர்கள் ஓடினார்கள்.

அண்ட கடாகங்கள் வெடிப்பது போன்ற இடி முழக்கத்தைக் கேட்டு அஞ்சி வேறு சிலர் ஓடினார்கள்.

மழை பிடித்துக் கொண்ட சிறிது நேரத்துக்கெல்லாம் பகற் பொழுது சென்று இரவு நெருங்கி வந்தது.

அன்றிரவே தஞ்சாவூர்க் கோட்டைக்குள் பிரவேசித்து விட வேண்டும் என்ற எண்ணத்தைச் சேந்தன் அமுதனும் பூங்குழலியும் கைவிட்டு விட்டார்கள்.

சேந்தன் அமுதனின் நந்தவனக் குடிலுக்கு அன்றிரவு போய்ச் சேர்ந்தால் போதும் என்று தீர்மானித்தார்கள்.

மழைக் கால இருட்டில் ஒருவரையொருவர் தைரியப்படுத்திக்கொண்டு ஜாக்கிரதையாக நடந்தார்கள்.

"பூங்குழலி! நடுக்கடலில் எவ்வளவோ புயல்களையும் பெருமழையையும் பார்த்தவளாயிற்றே நீ! மலை போன்ற அலைகளுக்கு மத்தியில் படகு விட்டுக் கொண்டு போகிறவள் ஆயிற்றே! இந்த மழைக்கு இவ்வளவு பயப்படுகிறாயே?" என்றான் சேந்தன் அமுதன்.

"நடுக்கடலில் எவ்வளவுதான் புயல் அடித்தாலும் மழை பெய்தாலும் தலையில் மரம் ஒடிந்து விழாதல்லவா? விழுந்தால் இடிதானே விழும்?" என்றாள் பூங்குழலி.

இவ்விதம் பூங்குழலி கூறி வாய் மூடுவதற்குள் அவர்களுக்கு எதிரே சற்றுத் தூரத்தில் சடசடவென்று மரம் முறிந்து விழும் சத்தம் கேட்டது.

சேந்தன் அமுதன் பூங்குழலியின் கையைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டு மேலே செல்வதை நிறுத்தினான்.

"இனி அவசரப்பட்டுக் கொண்டு போவதில் உபயோகமில்லை. சாலை ஓரத்தில் இங்கே சில மண்டபங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றில் சிறிது நேரம் தங்கி மழையின் வேகம் குறைந்த பிறகு மேலே போகலாம்!" என்றான் சேந்தன் அமுதன்.

"அப்படியே செய்யலாம். ஆனால் மண்டபத்தை இந்த இருளில் எப்படிக் கண்டுபிடிப்பது?" என்றாள் பூங்குழலி.

"மின்னல் மின்னும் போது பார்த்தால் தெரிந்து விடும். இருபுறமும் கவனமாகப் பார்க்க வேண்டும்!" என்றான் சேந்தன் அமுதன்.

வானத்தையும் பூமியையும் பொன்னொளி மயமாக்கிக் கண்களைக் கூசச் செய்த ஒரு மின்னல் மின்னியது.

"அதோ ஒரு மண்டபம்!" என்றான் சேந்தன் அமுதன்.

பூங்குழலியும் அந்த மண்டபத்தைப் பார்த்தாள். அதே மின்னல் வெளிச்சத்தில் அவர்களுக்கு முன்னால் சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய மரம் விழுந்து கிடப்பதையும் பார்த்தாள். விழுந்த மரத்தினடியில் சிலர்

சிக்கிக் கொண்டிருப்பது போலத் தோன்றியது.

"அமுதா! விழுந்து கிடந்த மரத்தைப் பார்த்தாயா? அதனடியில்..." என்றாள்.

"ஆமாம், பார்த்தேன். அந்தக் கதி நமக்கும் ஏற்பட்டு விடப் போகிறது. சீக்கிரம் மண்டபத்துக்குப் போய்ச் சேரலாம்!" என்று கூறி விட்டு அமுதன் பூங்குழலியின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு மண்டபம் இருந்த திசையைக் குறி வைத்து விரைந்து சென்றான்.



ருவரும் மண்டபத்தை அடைந்தார்கள். சொட்ட நனைந்திருந்த துணிகளிலிருந்து தண்ணீரைப் பிழிந்தார்கள். துணியைப் பிழிந்த பிறகு பூங்குழலி தன் நீண்ட கூந்தலையும் பிழிந்தாள்.

பிழிந்த ஜலம் மண்டபத்தின் தரையில் விழுந்து சிறு கால்வாய்களாக ஓடியது.

"அடாடா! மண்டபத்தை ஈரமாக்கி விட்டோமே?" என்றாள் பூங்குழலி.

"மண்டபத்துக்கு அதனால் தீங்கு ஒன்றுமில்லை. ஜலதோஷம், காய்ச்சல் வந்து விடாது! நீ இப்படிச் சொட்ட நனைந்து விட்டாயே?" என்றான் அமுதன்.

"நான் கடலிலேயே பிறந்து வளர்ந்தவள். எனக்கு இன்னொரு பெயர் 'சமுத்திர குமாரி'. என்னை மழைத் தண்ணீர் ஒன்றும் செய்து விடாது" என்றாள் பூங்குழலி.

அவளுடைய உள்ளம் அப்போது தஞ்சாவூர்க் கோட்டைக்கு அருகிலிருந்த சாலை ஓர மண்டபத்திலிருந்து நாகைப்பட்டினத்துச் சூடாமணி விஹாரத்துக்குப் பாய்ந்து சென்றது. 'சமுத்திர குமாரி' என்று அவளை முதன் முதலாக அழைத்தவர் அந்தச் சூடாமணி விஹாரத்தில் அல்லவா இருந்தார்?

"பூங்குழலி! என்னுடைய நந்தவனமும் குடிசையும் சிறிது தூரத்திலே தான் இருக்கிறது. மழை விட்டதும் அங்கே போய் விடலாம். என் தாயார் உன்னைச் சரியாகக் கவனித்துக் கொள்ளுவாள்!" என்று அமுதன் கூறிய வார்த்தைகள் பூங்குழலியின் காதில் அரை குறையாக விழுந்தன.



றுபடியும் பளிச் சென்று கண்ணைப் பறித்தது ஒரு மின்னல். அதன் ஒளியில் அவர்கள் முன்னம் அரை குறையாகப் பார்த்த காட்சி நன்றாகத் தெரிந்தது. இருவரும் திடுக்கிட்டுப் போனார்கள்.

சாலையில் ஏறக்குறைய அந்த மண்டபத்துக்கு எதிரே ஒரு பெரிய ஆல மரம் வேரோடு பறிக்கப்பட்டு விழுந்து கிடந்தது. விசாலமாகப் படர்ந்திருந்த அதன் கிளைகளும் விழுதுகளும் தாறுமாறாக முறிந்தும் சிதைந்தும் கிடந்தன.

அவற்றுக்கடியில் இரண்டு குதிரைகளும் ஐந்தாறு மனிதர்களும் அகப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்படி அகப்பட்டுக் கொண்டிருந்தவர்களை விடுதலை செய்து காப்பாற்றுவதற்காக வேறு சிலர் முயன்று கொண்டிருப்பது தெரிந்தது. அவசரம் அவசரமாக அவர்கள் முறிந்து கிடந்த கிளைகளை அப்புறப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.

"ஐயோ!" "அப்பா!" "இங்கே!" "அங்கே!" "சீக்கிரம்!" என்பவை போன்ற குரல்கள் மழைச் சத்தத்தினிடையே மலினமாகக் கேட்டன.

இவற்றையெல்லாம் விட அதிகமாகச் சேந்தன் அமுதன், பூங்குழலியின் கவனத்தை வேறொன்று கவர்ந்தது. விழுந்து கிடந்த மரத்துக்குச் சற்றுத் தூரத்தில் ஒரு பல்லக்கு தரையில் வைக்கப்பட்டிருந்தது. அதன் அருகில் இரண்டு ஆட்கள் மட்டும் நின்றார்கள். மற்றவர்கள் விழுந்த மரத்தினடியில் அகப்பட்டுக் கொண்டவர்களைக் காப்பாற்றுவதில் முனைந்திருந்தார்கள் போலும்.

"அமுதா! பல்லக்கைப் பார்த்தாயா?" என்று கேட்டாள் பூங்குழலி.



"பார்த்தேன், பழுவூர் இளைய ராணியின் பல்லக்குப் போல இருந்தது."

"விழுந்த மரம் அந்தப் பல்லக்கின் மேலே விழுந்திருக்கக் கூடாதா?"

"கடவுளே! ஏன் அப்படிச் சொல்கிறாய்? பழுவூர் ராணியைப் பார்த்து அவள் மூலமாக ஏதோ காரியத்தைச் சாதிக்கப் போகிறதாகச் சொன்னாயே?"

"ஆமாம்; இருந்தாலும், அந்தப் பழுவூர் இளைய ராணியை எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை!"

"பிடிக்காவிட்டால், அவள் பேரில் மரம் முறிந்து விழ வேண்டுமா, என்ன?"

"சாதாரணப் பட்டவர்களின் தலையிலேதான் மரம் விழ வேண்டுமா? ராணிகளின் தலையிலே விழக் கூடாதா? ... அது போனால் போகட்டும். இப்போது நாம் பல்லக்கினருகில் சென்று பழுவூர் ராணியைப் பார்த்துப் பேசலாமா? கோட்டைக்குள் போவதற்கு அவளுடைய உதவியைக் கேட்கலாமா?"

"அழகுதான்! ராணியைப் பேட்டி காண்பதற்கு நல்ல சமயம்; நல்ல இடம். பல்லக்கின் கிட்டப் போனால் மழைக் கால இருட்டில் திருட வருகிறோம் என்றெண்ணி நம்மை அடித்துப் போட்டாலும் போடுவார்கள்."

"ராணியை நான் பார்த்து விட்டால், அப்புறம் காரியம் எளிதாகி விடும்...."

"அது எப்படி?"

"என் அண்ணியின் பெயரைச் சொல்வேன். அல்லது மந்திரவாதி ரவிதாஸன் அனுப்பினான் என்பேன்."

"நல்ல யோசனைதான்! ஆனால் ராணியின் அருகில் நெருங்க முடிந்தால் அல்லவோ? .... அதோ பார், பூங்குழலி!"



ண்டும் ஒரு மின்னல் மின்னியது. அதன் வெளிச்சத்தில் இரண்டு பேர் பல்லக்கைத் தூக்குவது தெரிந்தது. ஆகா! கிளம்பி விட்டார்களா? இல்லை, இல்லை! மண்டபத்தை நோக்கியல்லவா பல்லக்கு வருவது போலக் காண்கிறது?

ஆம்; சிறிது நேரத்தில் பல்லக்கு மண்டபத்தின் முகப்புக்கு வந்து சேர்ந்தது. பல்லக்கைச் சுமந்து வந்தவர்கள் அதை இறக்கி வைத்தார்கள்.

"பழுவூர் இளைய ராணி நம்மைத் தேடிக் கொண்டல்லவா வருகிறாள்?" என்றாள் பூங்குழலி.

அமுதன் அவளுடைய கரத்தைப் பற்றிக் கொண்டு மண்டபத்தின் உட்புறத்தை நோக்கி நகர முயன்றான். ஆனால் பூங்குழலி அவ்விதம் நகர மறுத்தாள்.

இதற்குள் "யார் அங்கே?" என்று ஒரு அதட்டும் குரல் கேட்டது. பல்லக்கைச் சுமந்து வந்தவர்களில் ஒருவனின் குரல் என்பதைத் தெரிந்து கொண்டு, "பயப்படாதே, அண்ணே! உங்களைப் போல் நாங்களும் வழிப் போக்கர்கள்தான். மழைக்காக மண்டபத்தில் வந்து ஒதுங்கியிருக்கிறோம்!" என்று சொன்னாள் பூங்குழலி.

"சரி, சரி! பல்லக்கின் அருகில் வர வேண்டாம்!" என்றது அதே குரல்.

"நாங்கள் ஏன் பல்லக்கின் அருகில் நெருங்கப் போகிறோம்? பல்லக்கில் ஏறுவதற்குப் பாக்கியம் செய்திருக்க வேண்டாமா?" என்றாள் பூங்குழலி.

சேந்தன் அமுதன் "வள்ளுவர் பெருமான் கூட இதைப் பற்றிச் சொல்லியிருக்கிறார். முற்பிறப்பில் செய்த வினைப்பயனைப் பற்றிக் கூறும் போது...." என்று தொடங்கினான்.

"போதும் போதும்! வாயை மூடிக் கொண்டு சும்மா இருங்கள்! நீங்கள் எத்தனை பேர்!"

"நாங்கள் இரண்டு பேர்தான். இன்னும் இரண்டு நூறு பேர் வந்தாலும் இந்த மண்டபத்தில் மழைக்கு ஒதுங்கலாம்!....." என்றான் அமுதன்.

தான் உண்மையென்று நம்பியதையே அமுதன் சொன்னான். அதே மண்டபத்தின் உட்புறத்தில் தூணின் மறைவில் மூன்றாவது மனிதன் ஒருவன் நின்றது அவனுக்குத் தெரிந்திருக்கவில்லை.

ல்லக்குச் சுமந்தவன், "நான் அப்போதே சொன்னேன். மழை வந்ததும் மண்டபத்தில் போய் ஒதுங்கலாம்என்றேன்; கேட்கவில்லை., அதனால் இந்த சங்கடம் நேர்ந்தது!" என்று தன் தோழனிடம் சொன்னான்.

"இப்படி ஆகும் என்று யார் அப்பா, கண்டது? மழை வலுப்பதற்குள் கோட்டைக்குள் போய் விடலாம் என்று எண்ணினோம். இந்த மட்டும் பல்லக்கின் மேல் மரம் விழாமல் போச்சே!" என்றான் அவன் தோழன்.

இச் சமயம் இன்னொரு பிரகாசமான மின்னல் மின்னியது.

சேந்தன் அமுதன் — பூங்குழலி இவர்களுடைய கண்களும் கவனமும் பல்லக்கின் பேரிலேயே இருந்தது.

ஆகையால் அந்த மின்னல் வெளிச்சத்தில், பல்லக்கின் திரையை விலக்கிக் கொண்டு ஒரு பெண்மணி தாங்கள் நின்ற திசையை உற்று நோக்கிக் கொண்டிருந்ததை அவர்கள் பார்த்தார்கள். அப்படி நோக்கிய பெண்மணியின் முகம் அவர்களைப் பார்த்து இன்னார் என்று தெரிந்து கொண்டு புன்னகை புரிந்ததையும் கவனித்தார்கள்.

மறு வினாடி மண்டபத்திலும் வெளியிலும் இருள் சூழ்ந்தது.

மிக மெல்லிய குரலில் பூங்குழலி, "அமுதா! பார்த்தாயா!" என்றாள்.

"ஆம், பார்த்தேன்."

"பல்லக்கில் இருந்தது யார்!"

"பழுவூர் இளைய ராணி தானே?"

"உனக்கு என்ன தோன்றியது?"

"பழுவூர் ராணியைப் போலேதான் இருந்தது. ஆனால் கொஞ்சம் சந்தேகமாக இருந்தது."

"சந்தேகமில்லை; நிச்சயந்தான்."

"எது நிச்சயம்?"

"பழுவூர் ராணி அல்ல; பித்துப் பிடித்த என் அத்தை ராணிதான் பல்லக்கில் இருக்கிறாள்!"

"உஷ்! இரைந்து பேசாதே!"

"இரைந்து பேசாவிட்டால் காரியம் நடப்பது எப்படி?"

"என்ன காரியம்?"

"எதற்காக இத்தனை தூரம் வந்தோமோ, அந்தக் காரியந்தான். அத்தையைக் கண்டுபிடித்து விட்டோம். அவளை விடுவித்து அழைத்துப் போக வேண்டாமா?"

"இப்போது அது முடியாத காரியம், பூங்குழலி! பல்லக்கு எங்கே போய்ச் சேர்கிறது என்று பார்த்துக் கொள்வோம். பிறகு யோசித்து விடுதலை செய்வதற்கு வழி தேடலாம்."

"தும்பை விட்டு விட்டு வாலைப் பிடிக்க வேண்டும் என்கிறாயே? அதெல்லாம் முடியாது. இப்போதே அத்தையை விடுதலை செய்தாக வேண்டும். உனக்குப் பயமாயிருந்தால் நீ சும்மா இரு!"

"விடுதலையாவதற்கு உன் அத்தை சம்மதிக்க வேண்டாமா? பல்லக்கில் ஏறி ஜாம்ஜாம்என்று போய்க்கொண்டிருக்கிறாள். எங்கே போகிறாள், எதற்காக, யார் அவளைப் பிடித்து வரச் செய்தது என்றெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டாமா?"

"பாதாளச் சிறைக்குக் கொண்டு போகிறார்களோ, என்னமோ? அப்புறம் நம்மால் என்ன செய்ய முடியும்?"

"ஏன் முடியாது? பாதாளச் சிறையில் நானே இருந்து வெளிவந்தவன் தான். அரண்மனைகளில் எனக்கும் கொஞ்சம் செல்வாக்கு உண்டு. உன் அத்தையை எப்படியாவது நான் விடுதலை செய்கிறேன். இப்போது நீ சும்மா இரு!"

பூங்குழலியும் அச்சமயம் பொறுமையுடன் சும்மா இருக்கத்தான் வேண்டும் என்று தீர்மானித்தாள். அப்போது அவர்கள் சிறிதும் எதிர்பாராத காரியம் ஒன்று நிகழ்ந்தது.

மூடு பல்லக்கின் விலகிய திரை இன்னும் நன்றாய் விலகுவது போலிருந்தது. அதன் உள்ளிருந்து ஓர் உருவம் வெளியே வந்தது. சத்தம் சிறிதுமின்றிப் பூனை நடப்பது போல் நடந்தது. அடுத்த வினாடி அவர்கள் அருகில் வந்து விட்டது.

இவ்வளவும் நல்ல இருட்டில் நடந்தபடியால், மண்டபத்தின் அடிப்படிகளில் நின்ற காவலர்கள் கண்ணில்படவில்லை.

பல்லக்கிலிருந்து வெளிவந்தவள் ஊமை ராணிதான் என்பதைப் பூங்குழலி அந்த இருளிலும் நன்றாய்த் தெரிந்து கொண்டு விட்டாள்.

ஊமை ராணி அந்த இரண்டு பேரின் கைகளையும் பிடித்து இழுத்துக் கொண்டு அம் மண்டபத்தின் பின் பகுதிக்கு விரைந்து சென்றாள்.

பூங்குழலியைத் தழுவிக் கொண்டு உச்சி முகந்து, அவளைப் பார்த்ததில் தன் மகிழ்ச்சியைத் தெரிவித்தாள்.

பின்னர், அத்தைக்கும் மருமகளுக்கும் சமிக்ஞை பாஷையில் சிறிது நேரம் சம்பாஷணை நடந்தது.

அந்தக் காரிருளில் அவர்கள் ஒருவருக்கொருவர் எப்படித்தான் பேசிக் கொண்டார்களோ? ஒருவர் கருத்தை ஒருவர் எவ்வாறுதான் தெரிந்து கொண்டார்களோ? அது நம்மால் விளங்கச் சொல்ல முடியாத காரியம்.

பூங்குழலி சேந்தன் அமுதனிடம், "அத்தை சொல்லுவது உனக்குத் தெரிந்ததா? என்னைப் பல்லக்கில் ஏறிக் கொண்டு போகச் சொல்கிறாள். அவளை உன் வீட்டுக்கு அழைத்துப் போகச் சொல்லுகிறாள்!" என்றாள்.

"உன் சம்மதம் என்ன? பூங்குழலி!" என்று அமுதன் கேட்டான்.

"அத்தை சொல்கிறபடி செய்யப் போகிறேன். அவளைப் பிடித்துக் கொண்டு வரச் சொன்னவர்கள் இன்னார் என்று தெரிந்து கொள்வதற்குச் சரியான உபாயம் அல்லவா?"

"யோசித்துச் சொல்லு! பூங்குழலி! உபாயம் சரிதான்! அதில் என்ன அபாயம் இருக்குமோ?"

"அமுதா! நீ கவலைப்படாதே! அத்தை சொன்னபடி செய்வதினால் எனக்கு ஓர் அபாயமும் ஏற்படாது. அப்படி ஏற்படுவதாயிருந்தால், என் இடுப்பில் இந்தக் கத்தி இருக்கவே இருக்கிறது!" என்று சொன்னாள் பூங்குழலி.

அத்தையை மறுபடி ஒருமுறை தழுவிக் கொண்டு விட்டுப் பூங்குழலி அவளைப் போலவே சத்தம் செய்யாமல் நடந்து சென்று பல்லக்கில் புகுந்து திரையையும் விட்டுக் கொண்டாள்.

## அத்தியாயம் 22

## அநிருத்தரின் ஏமாற்றம்

முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் சில தினங்களாகத் தலைநகரிலேயே தங்கியிருந்தார். அவரைக் காண்பதற்கு அரசாங்க அதிகாரிகள், சிற்றரசர்கள், சேனைத் தலைவர்கள், அயல் நாட்டுத் தூதர்கள், வர்த்தகக் குழுக்களின் பிரதிநிதிகள், ஆலய நிர்வாகிகள், தென் மொழி வடமொழி வித்வான்கள் முதலியோர் வந்த வண்ணமிருந்தார்கள். ஆதலின் அவருடைய மாளிகையின் வாசலில் ஜே, ஜே என்று எப்போதும் ஜனக் கூட்டமாக இருந்தது.

அநிருத்தர் தமக்கென்று தனியாகக் காவல் படை வைத்துக் கொள்ளவில்லை. பரிவாரங்களும் மிகக் குறைவாகவே வைத்துக் கொண்டிருந்தார். ஆகையால் பழுவேட்டரையர்களோடு அவருக்குத் தகராறு எழுவதற்குக் காரணம் எதுவும் ஏற்படாமலிருந்தது.

ஆனபோதிலும், சின்னப் பழுவேட்டரையர் முணுமுணுத்துக் கொண்டிருந்தார். முதன் மந்திரி தஞ்சை நகரில் தங்க ஆரம்பித்ததிலிருந்து கட்டுக்காவல் குறைந்து போயிருந்தது. முதன் மந்திரியைக் காண வேண்டுமென்ற வியாஜத்தில் கண்டவர்கள் எல்லாம் கோட்டைக்குள் நுழைந்து கொண்டேயிருந்தார்கள். சக்கரவர்த்தியின் அரண்மனையை அடுத்து முதன் மந்திரியின் மாளிகை இருந்தபடியால், அரண்மனை வட்டாரத்திலும் ஜனக் கூட்டம் அதிகமாகிக் கொண்டிருந்தது. முதன் மந்திரியின் பெயரைச் சொல்லிக் கொண்டும் அவருடைய இலச்சினையைக் காட்டிக் கொண்டும் அநேகம் பேர் அங்கே வந்து அவரைப் பார்த்த வண்ணமிருந்தார்கள்.

இதையெல்லாம் ஓரளவு கட்டுப்படுத்த வேண்டும் என்று சின்னப் பழுவேட்டரையர் விரும்பினார். ஆனால் நேரில் முதன் மந்திரியிடம் போய்ச் சண்டை பிடிப்பதற்கு வேண்டிய துணிச்சல் அவருக்கு இல்லை. பெரிய பழுவேட்டரையரும் இருந்தால், இருவருமாக யோசித்து ஏதேனும் செய்யலாம். இந்தச் சமயம் பார்த்துப் பெரிய பழுவேட்டரையர் கடம்பூருக்குப் போய் விட்டதனால், சின்னவரான காலாந்தக கண்டருக்கு ஒரு கை ஒடிந்தது போல் இருந்தது.

கோட்டைக்குள் ஜனக் கூட்டத்தைச் சேர்த்துக் கட்டுக் காவலுக்கு ஊறு விளைவிப்பது போதாது என்று,



முதன் மந்திரி அநிருத்தர் அடிக்கடி ஏதாவது சின்னப் பழுவேட்டரையரிடம் உதவி கேட்கும் பாவனையில் அவருக்குக் கட்டளை அனுப்பிக் கொண்டிருந்தார்.

சில நாளைக்கு முன்பு கோடிக் கரைக்கு அனுப்புவதற்குச் சில வீரர்கள் வேண்டும் என்று கேட்டார். காலாந்தக கண்டரும் ஆட்களைக் கொடுத்து உதவினார். பிறகு, நேற்றைக்கு, உயர்குலத்துப் பெண்மணி ஒருவரைத் திருவையாற்றிலிருந்து அழைத்து வர வேண்டுமென்றும், அதற்குப் பழுவூர் அரண்மனையின் மூடு பல்லக்கு ஒன்றும், சிவிகை தூக்கிகளும் வேண்டும் என்றும் சொல்லி அனுப்பினார். சின்னப் பழுவேட்டரையர் இந்தக் கோரிக்கையையும் நிறைவேற்றினார். ஆனால் மனத்திற்குள், "இந்தப் பிரம்மராயன் ஏதோ சூழ்ச்சியில் ஈடுபட்டிருக்கிறான். அவ்விதம் மூடு பல்லக்கில் வைத்து வரவழைக்கக் கூடிய உயர் குடும்பத்துப் பெண்மணி யார்? எதற்காக இங்கே வருகிறாள்? இதை எப்படியும் கண்டுபிடிக்க வேண்டும். இத்தகைய சந்தர்ப்பத்தில் தமையனார் இங்கே இல்லாமற் போய் விட்டாரே?" என்று அவர் மனசு சஞ்சலப் பட்டது.



முதன் மந்திரி அநிருத்தரின் மாளிகைக்கு மூடு பல்லக்கில் வந்தது யார் என்று தெரிந்து கொள்ள இன்னொரு மனிதனும் ஆவல் கொண்டிருந்தான். அவன் வேறு யாரும் இல்லை; அநிருத்த பிரம்மராயரின் அருமைச் சீடனான ஆழ்வார்க்கடியான்தான்.

பெருமழை பெய்த அன்றைக்கு மறுநாள் காலையில் அநிருத்தப்பிரம்மராயர் ஸ்நான பானம், ஜபதபம், பூஜை புனஸ்காரம் ஆகியவற்றை முடித்துக் கொண்டு மாளிகையின் முன் முகப்புக்கு வந்து சேர்ந்தார். தம்மைக் காண்பதற்கு யாரார் வந்து காத்திருக்கிறார்கள் என்று சேவகனைப் பார்த்துக் கொண்டு வரச் செய்தார். காத்திருந்தவர்களில் ஆழ்வார்க்கடியான் ஒருவன் என்று தெரிந்ததும், அவனை உடனே கூட்டி வரும்படி ஆக்ஞாபித்தார்.

ஆழ்வார்க்கடியான் தன் குருநாதரின் முன்னால் விரைந்து வந்து பய பக்தி வினயத்துடன் நின்றான்.

"திருமலை! போன காரியம் என்ன ஆயிற்று?" என்று அநிருத்தர் கேட்டார்.

"குருவே! மன்னிக்க வேண்டும். தோல்வியடைந்து திரும்பினேன்" என்றான் ஆழ்வார்க்கடியான்.

"ஒருவாறு நான் எதிர்பார்த்ததுதான். ஆதித்த கரிகாலரைச் சந்திக்கவே முடியவில்லையா?"

"சந்தித்தேன், ஐயா! தாங்கள்

சொல்லச் சொன்ன செய்திகளையும் சொன்னேன். ஒன்றும் பயனில்லை. இளவரசரைக்கடம்பூர் அரண்மனைக்குப் போகாமல் தடுக்க முடியவில்லை....''

''இளவரசர் இப்போது கடம்பூரில் தான் இருக்கிறாரா? ''

''ஆம், குருவே! சம்புவரையரின் மாளிகையில் அவர் பிரவேசித்ததைப் பார்த்து விட்டுத்தான் வந்தேன். இளவரசருக்குச் சம்புவரையர் இராஜோபசார வரவேற்பு அளித்தார். சுற்றுப்புறத்து மக்கள் காட்டிய உற்சாகத்தையோ வர்ணிக்க முடியாது.''

''அதெல்லாம் எதிர்பார்க்கக் கூடியதுதான். கடம்பூர் மாளிகைக்கு இன்னும் யார், யார் வந்திருக்கிறார்கள்!''

''இளவரசருடன் பார்த்திபேந்திரனும்வந்தியத்தேவனும்வந்திருக்கிறார்கள். இங்கிருந்து பெரிய பழுவேட்டரையர் இளைய ராணியுடன் வந்திருக்கிறார். இன்னும் நடு நாட்டையும் திருமுனைப்பாடி நாட்டையும் சேர்ந்த பல சிற்றரசர்களையும் அழைத்திருப்பதாகக் கேள்விப்படுகிறேன்....''

''திருக்கோவலூர் மலையமான்? ....''

''மணிமுத்தா நதிவரையில் இளவரசருடன் வந்து திரும்பிப் போய் விட்டார்!''

''அந்த வீரக் கிழவன் சும்மா இருக்க மாட்டான். இதற்குள் சைனியம் திரட்டத் தொடங்கியிருப்பான். தெற்கேயிருந்து கொடும்பாளூர்ப் பெரிய வேளான் பெரிய சைன்யத்துடன் வருவதாகக் கேள்விப்படுகிறேன். இந்த ராஜ்யத்துக்குக் கேடு ஒன்றும் வராமல் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும். திருமலை! நீ வரும் வழியில் சோழ நாட்டு மக்கள் என்ன பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்பது ஏதேனும் காதில் விழுந்ததா? ''

''சின்ன இளவரசருக்கு நேர்ந்த கடல் விபத்தைப் பற்றியே அதிகம் பேசிக் கொண்டிருக்கிறார்கள். பழுவேட்டரையர்கள் மீது ஒரே கோபமாயிருக்கிறார்கள். சிலர் தங்களையும் சேர்த்துக் குறை கூறுகிறார்கள்....''

''ஆம், ஆம்; குறை கூறுவதற்கு அவர்களுக்கு நியாயம் இருக்கத்தான் செய்கிறது. திருமலை! சீக்கிரத்தில் இந்த முதன் மந்திரி உத்தியோகத்தை விட்டு விட எண்ணியிருக்கிறேன்...''

''குருவே! தாங்கள் அப்படிச் செய்தால் எனக்கும் விடுதலை கிடைக்கும். ஆழ்வார்களின் பாசுரங்களை நாடெங்கும் பாடி யாத்திரை செய்து ஆனந்தமாய்க் காலங் கழிப்பேன். எப்போது உத்தியோகத்தை விட்டு விடப் போகிறீர்கள், ஐயா!''

''இராஜ்யத்திற்கு விபத்து நேராமல் பாதுகாக்கக் கடைசியாக ஒரு முயற்சி செய்து பார்க்கப்போகிறேன். அது முடிந்ததும் விடப் போகிறேன்.....''

''அது என்ன முயற்சி, குருவே!''

''அந்த முயற்சியில் மிக முக்கியமான முதற்படி ஏறியாகி விட்டது. திருமலை! உன்னால் முடியாது என்று நீ கைவிட்டு விட்ட ஒரு காரியத்தில் நான் வெற்றி பெற்று விட்டேன்...''

''அதில் வியப்பு ஒன்றுமில்லை, ஐயா! அது என்ன காரியமோ? ''

''ஈழத் தீவில் பித்துப் பிடித்தவள் போலத் திரிந்து கொண்டிருக்கும் ஓர் ஊமை ஸ்திரீயைத் தேடிப் பிடித்து அழைத்து வரச் சொன்னேன் அல்லவா? உன்னால் அந்தக் காரியம் முடியவில்லை என்று திரும்பி வந்து கூறினாய் அல்லவா? '' என்று அநிருத்தர் கேட்டார்.

''ஆம், ஐயா! அந்த ஊமை ஸ்திரீ....''

''நேற்றிரவு நம் அரண்மனைக்கு அவளைக் கொண்டு வந்தாகி விட்டது.''

''ஆகா! அதிசயம்! அதிசயம்! இதை எப்படிச் சாதித்தீர்கள்? ''

''சின்ன இளவரசர் தப்பிப் பிழைத்தாரா இல்லையா என்று தெரிந்து கொள்ள அந்த ஊமைப் பெண் கோடிக்கரைக்கு வருவாள் என்று எதிர்பார்த்தேன். வந்தால் அவளைப் பிடித்துக் கொண்டு வரும்படி ஆட்களை அனுப்பியிருந்தேன். நல்ல வேளையாக, அவள் அதிக தொந்தரவு கொடுக்காமலே வந்து விட்டாள். இந்த வேடிக்கையைக் கேள், திருமலை! திருவையாற்றிலிருந்து அவளை மூடு பல்லக்கில் வைத்து அழைத்து வரச் செய்தேன். இதற்கா

கப் பழுவூர் இளைய ராணியின் மூடு பல்லக்கையே அனுப்பி வைத்தேன்....''

''ஐயா! நேற்று மாலை பெரும் புயலும் மழையும் அடித்ததே!''

''ஆம்; அதனால் வழியில் தடங்கல் ஏற்பட்டது. எனக்குக் கூடக் கவலையாகத்தானிருந்தது. நேற்று நள்ளிரவு நேரத்துக்குப் பல்லக்கு வந்த பிறகுதான் நிம்மதியாயிற்று.''

''ஓகோ! நள்ளிரவு ஆகிவிட்டதா? தாங்களும் அத்தனை நேரமும் விழித்திருந்து வரவேற்பு அளித்தீர்களா? ''

''விழித்திருந்தேன். ஆனால் வரவேற்பதற்கு நான் போகவில்லை. வீட்டுப் பெண்களை விட்டே வரவேற்கச் செய்தேன். வெறி பிடித்தவளாயிற்றே, என்ன தகராறு செய்கிறாளோ என்று கவலையாகத்தானிருந்தது. நல்ல வேளையாக, அப்படி ஒன்றும் நடக்கவில்லை. நன்றாகச் சாப்பிட்டு விட்டு, உடனே உறங்கி விட்டாள். திருமலை! உண்மையைச் சொல்லப் போனால், இன்னமும் அவளைப் பார்க்கும் விஷயத்தில் எனக்குக் கொஞ்சம் பயமாய்த்தானிருக்கிறது. நீ இச்சமயம் வந்தது நல்லதாய்ப் போயிற்று...''

''குருவே! நானும் அந்தப் பெண் மணியைப் பார்ப்பதற்கு மிக்க ஆவலாயிருக்கிறேன்....''

''அப்படியானால், வா! அந்தப் புரத்துக்குப் போகலாம். உன்னை ஏற்கெனவே அவளுக்குத் தெரியும் அல்லவா? நீ சின்ன இளவரசருக்கு வேண்டியவன் என்பதும் தெரியும். ஆகையால் உன்னிடம் சிறிது சுமுகமாக இருக்கக் கூடும்.''

குருவும் சீடனும் மாளிகையின் பின்கட்டுக்குச் சென்றார்கள். தாதிமார்களிடம் நேற்றிரவு வந்த பெண் மணியை அழைத்து வரும்படி அநிருத்தப் பிரம்மராயர் கட்டளையிட்டார்.

தாதிமார்கள் அந்த ஸ்திரீயை அழைத்துக் கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

அநிருத்தர் அவ்வளைப் பார்த்துத் திகைத்துப் போய் நின்றார்.

ஆழ்வார்க்கடியானின் முகத்தில் புன்னகை தவழ்ந்தது.

(தொடரும்)

**ப**தினோரு மணியளவில் பிரபாகரன் தான் போன் செய்து முதலில் அந்தச் செய்தியைச் சொன்னான்.

"'பாரம் சுமப்பவர்கள்' கதை பத்திரிகையில் பிரசுரமாகியிருக்கு குமார்! படமும், பிரமாதமா வந்திருக்கு. சுதா இதைக் கண்டிப்பாப் படிப்பா. அவளுக்கு எல்லா விஷயமும் உடனே புரிஞ்சு போயிடும். என்னைக் காதலிச்சு, பணக்கார நண்பர் கிடைச்சதும்காதலன் நண்பனா மாறினதைக் கதைல படிச்சதும், கதை தன் கதைதான்... சொன்னது நான்தான்னு நிச்சயம் புரிஞ்சுப்பா. உன் கற்பனை நல்லா ஓடியிருக்கு. கதை ஜோர். தாங்க்யூ..."

முதல் ஷிப்ட் ஆனதால் மூன்று மணிக்கு வீட்டிற்குப் போனதும்தான் வழக்கமாகச் செய்தி தெரியும்.

பிரபா இதற்கென்று காத்திருந்தவன் மாதிரி பேங்கில் சர்க்குலேஷன் லைப்ரரிக்குப் பத்திரிகைகள் வாங்கியதும் பிரித்துப் பார்த்து உடனே சொல்லி இருக்கிறான்...

இந்தப் பிரபா என் பழைய ரூம் மேட். இந்த ஊருக்கு வேலை கிடைத்து வந்த புதிதில் ரூமே கிடைக்காமல் ஊரை விட்டுத் தள்ளி இருந்த ஒரு பெரிய வீட்டில் தங்க வேண்டி வந்தபோது உடன் இருந்தவன்.

இந்த பேங்க் உத்தியோகம் போக, மற்ற நேரங்களில் பத்திரிகைகளும் புத்தகங்களுமாய்ப் பொழுதைக் கழிப்பவன்.

அவன் பேங்கில் வேலை செய்கிற சுதா என்கின்ற பெண்ணைக் காதலிப்பதாய் அவன் சொன்ன போது சந்தோஷமாக இருந்தது.

ஞாயிறுதோறும் அவள் வீட்டில் போய்ப் பேசிக் கொண்டிருப்பான். டீ. வி. பார்ப்பான். டெக்கில் சில நல்ல படங்களை அவர்கள் வீட்டில் வைத்துப் பார்க்க ஏற்பாடு செய்வான்.

'தர்சனா' என்ற அமைப்பின் சார்பில் ஒரு வாரம் கலைப் படங்கள் காட்டிய போது, அவன் சுதாவை எனக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

ஒரு கவர்ச்சி கலந்த எளிமை. கைத்தறிப் புடைவையின் மொடமொடப்புக் கலையாமல் நேர்த்தியாகக் கட்டியிருந்தாள். பெரிய கண்கள். பளீரென்ற சிரிப்பு.

'பிரபா யோகக்காரன்' என்று நினைத்ததுண்டு.

அந்த நினைப்பை எல்லாம் மாற்றுகிற மாதிரி ஒரு புதிய கதையுடன் பிரபா போன மாதம் வந்தான்.

"என்ன பிரபா... ஒரு மாதிரி டல்லடிச்ச இருக்கே?"

"நத்திங் குமார். தயவு செய்து சுதாவைப் பத்தி எதுவும் கேட்காதே."

"சுதாவைப் பத்தியா? என்னாச்சு... நீயா என்னென்னமோ பேசறியே?"

"எஸ்... குமார்... அவள் என்னைப் புறக்கணிக்கறா. நான் சாதாரண கிளார்க்தானே! இன்னிக்குப் புதுசா வந்த அதிகாரி அவளுக்கு இனிக்க ஆரம்பிச்சுட்டான்."

"சும்மா நீயாக ஏதாவது கற்பனை பண்ணிக்காதே பிரபா."

"நோ... குமார்... இது என் கற்பனை இல்லை; நிஜம். இனிமேல் நான் அவளைக் கல்யாணம் பண்ணிப்பேன்னு நினைச்சா அதுதான் கற்பனை. சந்தோஷமா இத்தனை நாள் பேசிப் பழக என்னை அவள் பயன்படுத்திக்கிட்டா. நான் இனிமேல் அவள் என்னோட பழகின பழைய நாட்களை நினைச்சுத் திருப்திப்பட்டுக்க வேண்டியது தான்."

"என்ன பிரபா, என்ன நடந்ததுன்னு சொல்லாம, நீயே ஏதேதோ புலம்பறே...?"

"சொன்னால் உன்னால் என்ன செய்ய முடியும் குமார்? அவகிட்டே போய் நீதியா கேட்க முடியும்! மனசைப் புரிஞ்சுக்காம, இதெல்லாம் போராடி வாங்குகிற சமாசாரமா? நான் ஏமாந்துட்டேன் குமார். பெண்களோட சிநேகிதம் ஏமாத்தக் கூடியது. பொய். நம்மளைவிட பசையா ஒருத்தன் கிடைச்சா அவன் பக்கம் போய்டுவாங்க... ஆசையையும் காதலையும் மனசுல பாரமாச் சுமந்துக்கிட்டு நாம்தான் திரியணும்... இதை எழுது குமார். என் வருத்தம் அவளுக்குப் புரியட்டும். இனிமேலாவது அவள் வேறே யாரையேனும் ஏமாத்தாம இருக்கறதுக்கு நீ இதை எழுதணும் குமார். ப்ளீஸ்... எனக்காக..."

மறுக்க முடியவில்லை.

**அ**ந்தக் கதைதான் இந்த வாரம் இத்தனை சந்தோஷப் பேச்சு வார்த்தைகளுக்கும் காரணமாய் இருக்கிறது!

இன்னும் அரை மணி நேரத்தில் வீடு!

ஷிப்டு வேலையில் இது ஒரு சௌகரியம்! கிளம்புகிற சமயத்தில் போன்.

"ஹலோ..."

"குமார் இருக்காரா?"

"எஸ்... நீங்க?"

"சுதா... தயவு செய்து சாயங்காலம் கொஞ்சம் வீடு வரைக்கும் வர முடியுமா... ப்ளீஸ்."

"என்ன விஷயம்?"

"மறைப்பானேன்? என் தோழி உங்கள் சமீபத்திய கதையைப் பற்றிச் சில விஷயங்களைச் சொன்னாள். நானும் வாங்கிப் படிச் சேன். அது விஷயமாகப் பேச."

"ஹலோ, அதுல பேசறதுக்கு என்ன இருக்கு? ஜஸ்ட் அனதர் ஸ்டோரி. பிடிச்சாப் பாராட்டுங்க. இல்லேன்னா விட்டுடுங்க..."

"இல்லே குமார்... ஒரு ஃப்ரெண்டுங்கிற முறைல உங்ககிட்ட சிலதைப் பேச

விரும்பறேன். ஆஸ் எ ரிக்வெஸ்ட் வர முடியுமான்னு கேட்கிறேன்...''

''ஓ.கே.''

''தாங்க்யூ...''

ஐந்து மணிக்கு பேங்க் முடிந்தால் வீட்டுக்கு வர ஆறு மணி! டிபன், காப்பி கால் மணி நேரம் என்று கணக்கு வைத்து ஆறரைக்குப் போய்க் கதவைத் தட்டிய போது, தயாராகக் காத்திருந்தாள்.

''ஹலோ...''

வீட்டிற்குப் பின்னாலிருந்த தோட்டத்தில் இரண்டு பிரம்பு நாற்காலிகளைப் போட்டு உட்காரச் சொன்னாள்.

தலைநீட்டிப் பார்த்த அம்மாவையும் தங்கைகளையும் அறிமுகம் செய்து வைத்தாள்.

மௌனமான மூ வந்தது.

''உங்க கதை படிச்சேன் குமார். உண்மையிலேயே அது உங்க கதை இல்லே.''

''பின்னே...?''

''எங்க கதை. அதாவது எனக்கும் பிரபாகருக்கும் இடையே நடந்ததாகப் பிரபாவால் சொல்லப்பட்ட கதை.''

''ஓ...!''

''ஏன் குமார் அவ்வளவு அவசரமா அந்தக் கதையை முடிச்சுட்டீங்க? பெண்ணுன்னா வெறும் பணத்துக்கு மயங்குகிற, மயக்குகிற கூட்டம்னுதான் முடிவு பண்ணிட்டீங்களா?''

''சாரி சுதா... அந்தக் கதை ஒரு நிகழ்வு. எனக்கு விவரிக்கப்பட்ட செய்திகள் என்னைப் பாதித்தன. அதைப் பிரதிபலிச்சேன். அவ்வளவுதான்! அந்தக் கதையோட கருத்துத்தான் எனக்குப் பெண்கள் பற்றிய கருத்துன்னு சொல்ல வரலை...''

''அந்த அனுபவத்தை உங்ககிட்டே சொன்னவரோட கருத்துக்களை ஏற்று நீங்க கதையா எழுதினீங்கன்னா... அந்தக் கருத்தை உங்களுக்கு ஏற்றதாகவே நீங்களும் கருதி இருக்கணும் இல்லையா?''

கேள்வி திருப்பிப் போடப்பட்டுப் புத்திசாலித்தனமாகக் கேட்கப்பட்டது.

''நான் பிரபா கூட சாதாரணமாய்த்தான் பழகினேன் குமார். ஜஸ்ட் இப்ப உங்ககூட விவாதிக்கிற மாதிரி... சில சந்தர்ப்பங்கள்ல வெளில சந்திச்சிருக்கோம். மற்றபடி சிரித்துப் பேசி அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டு இருக்கோம். இது எப்படிக் காதலாக முடியும்?''

''ம்...''

''இப்போ புதுசா வந்திருக்கிற ஆபீசரும்



''மன்னா, நேற்று இரவு ஒரு திருடன் மக்களிடையே தர்ம அடி வாங்கியிருக்கின்றான்!''

''மெதுவாகச் சொல்லும். அது வேறு யாருமில்லை, நகர்ச் சோதனைக்குச் சென்ற நான் தான்!''

— புதூர் ஜெயராமன்.

நல்ல டைப்...''

''ம்...''

''நான் அவர் கூடப் பழகறது இவருக்குப் பிடிக்கலை.''

''ம்...''

''ஒருநாள் தர்ம சங்கடமா, அவர் முன்னாலேயே, 'இனிமேல் இவனோடதான் வாழப் போறியா?'ன்னு கேட்டுட்டார்... தெரியுமா?'' என்றாள்.

கேட்கச் சங்கடமாக இருந்தது.

யாரை யார் புரிந்து கொள்ளவில்லை.

''நான் ட்ரான்ஸ்பர் வாங்கிக் கொண்டு வேறே பிராஞ்சுக்கு மாறிட்டேன்! பிரபா மாறவே இல்லை, கடைசி வரைக்கும்! அவரும் அவரோட சந்தேகங்களும், ஒரு பெண்ணுக்கு — அதுவும் வேலைக்குப் போற பெண்ணுக்கு — இந்த மாதிரி நிலை ரொம்ப தர்மசங்கடமானது குமார்! யார்கிட்டே நிஜமான சிநேகிதத்தோட பழக முடியும்? பழகுற நபர் தவிர, சமுதாயம் அதை எப்படிப் பார்க்கும்...?''

''நிஜமான பிரச்னைதான் சுதா!''

''பட்... உங்க ரைட்டிங் நல்லா இருந்தது குமார். ஜாலிக்குப் பழகிட்டு, நல்ல இடம் அமைஞ்சதும் கழட்டிண்டு விடற சிநேகிதங்களும் உண்டு...''

''ஆணா... பெண்ணா...?''

''ரெண்டிலும்தான். ரெண்டும்தான்...'' என்றாள்.

''அதை ஒரு சாதாரணக் கதையா எடுத்துக்கோ சுதா... இதை நான் ஒரு பெரிய அனுபவமா எடுத்துக்கறேன். தாங்க்யூ...''

வாசல் வரை வந்து வழியனுப்பி வைத்தாள்.

ஒரு தடவை கூட அம்மாவோ தங்கைகளோ தலையை நீட்டி எட்டிப் பார்க்காதது சுதாவின் மேல் அவர்களுக்குள்ள நம்பிக்கையைக் காட்டியது.

# தோற்றம்



நான் அலுவலகத்துக்குள் நுழைந்த போது எனக்காக ஒரு பெண் காத்திருப்ப தாய்ச் சொன்னார்கள்.

சமீபத்தில் காலியான ஓர் இடத்துக்குக் குமாஸ்தா தேவை என்று என் கம்பெனி எம். டி. சொல்லிக் கொண்டிருந்த போது, நான் குறுக்கிட்டு எனக்குத் தெரிந்தவரின் மகளைப் பற்றிச் சொன்னேன்.

'இது சிறிய கம்பெனி. சுறுசுறுப்பாக இருக்கணும். வர்ற டெலிபோன் கால்களை அட்டெண்ட் பண்ணும் போது, சிரிச்ச முகமா சுமுகமாப் பழகணும். யாராவது வேலைக்கு வரலைன்னா அந்த வேலையை யும் இழுத்துப் போட்டுக்கிட்டுச் செய்ய ணும். இப்படி நிறைய எதிர்பார்க்கிறேன் — மிஸ்டர் மணி' என்றார் எம். டி.

'ரொம்ப ஏழைக் குடும்பம் சார். நல்லாப் படிச்ச பெண். ஒரு சான்ஸ் கொடுத்துத்தான் பாருங்களேன்' என்றேன்.

'சரி, உங்களுக்காக ஒத்துக்கறேன். நாளைக் காலையில் வரச் சொல்லுங்க, சரியாப் பத்து மணிக்கெல்லாம்...' என்று சொல்லியிருந் தார்.

அந்தப் பெண்ணாகத்தான் இருக்கும். பார்த்தேன்.

கொஞ்சம் கூடக் களையே இல்லாத முகம். முதலாளி சொன்ன தகுதிகளுக்கு நேர் மாறாகப் பேசவே பயப்படும் சுபாவம். வேலை கிடைக்குமா?

எம். டி. என்னை ஒரு மாதிரியாய்ப் பார்த் தார். எம். டி. அருகில் இருந்த இன்னொரு நபர் ''என்ன சார் இது, இந்தப் பெண் ணைப் பார்த்தாச் சரியா வேலை செய்யும்னு தோணலையே...'' என்று எம். டி. காதில் தூபம் போட்டார்.

வேலை தேடி வரும் பெண் தன்னை நன் றாக அலங்கரித்துக் கொண்டு கூடவா வரக் கூடாது? படபடவென்று பொரிந்து தள்ளா விட்டாலும், நறுக்கென்று ஆணித்தரமாய்ப் பதில் சொல்லக் கூடாதா என்ன?

''சரி ஒரு மாசம் புரொபேஷன். அதுக் குள்ள பிக்கப் பண்ணிடுதான்னு பார்ப் போம்'' என்றார் எம். டி.

''அதுகூட வேஸ்டுன்னு தோணுது சார். முதல்லேயே நல்ல பெண்ணாத் தேர்ந்தெடுத் துடுங்க. ஏன் வீண் ரிஸ்க்?'' என்று மறுபடி யும் பக்கத்தில் இருந்தவர் தூபம் போட்டார்.

''எதுக்கும் டயம் கொடுத்துப் பார்ப் போம் ஒரு மாசம்'' என்றார் எம். டி.

ஒரு வாரம் போயிருக்கும். எம். டி. என்னைக் கூப்பிட்டனுப்பினார். இப்போ தெல்லாம் எம். டி. யின் அறைக்குள் நானா கப் போவதில்லை. போனால் எங்கே நான் சிபாரிசு செய்த பெண்ணைப் பற்றிப் பொரிந்து தள்ளி விடுவாரோ என்ற அச்ச உணர்வு!

ஒருநாள் —

''உங்க செலக்ஷன் பிரில்லியண்ட்...'' என்று எம். டி. சொன்ன போது என்னைக் கிண்டல் செய்கிறாரோ என்று நினைத்தேன்.

எம். டி. சொன்னார்: ''ஒருத்தரோட வெளித் தோற்றத்தைப் பார்த்து எடை போடறது தப்புன்னு புரிஞ்சுக்கிட்டேன், மிஸ்டர் மணி. நீங்க சிபாரிசு செய்த பெண் ஒரே வாரத்தில் எல்லா வேலைகளையும் புரிஞ்சுக்கிட்டா. கோபமே வருவதில்லை. வேலையில் சின்ஸியர். எல்லா வேலை களிலும் ஆர்வம் காட்டறா. அவளை நிரந் தரமாக்கப் போறேன்'' என்ற போது சந் தோஷமாயிருந்தது.

கலகலப்பான சுபாவத்திற்குக் கூட ஏழ்மை எவ்வளவு எதிரி என்பது புரிந்தது.

— கௌசல்யா ரங்கநாதன்.

# 6

# சுக போகத் தீவுகள்

பிரபஞ்சன்

கிருஷ்ணமூர்த்திக்குக் குழப்பமாய் இருந்தது.

இருவர் இரு பக்கம் நின்று கொண்டு அவனைத் தன் பக்கமாக இழுக்க முயல்வது போலவும், அவர்களுக்கிடையில் அவன் சிக்குண்டு தவிப்பது போலவும் உணர்ந்தான். விநோதினி சொல்வது போல மாமா அவ்வளவு மோசமானவர்தானா, அல்லது நிகழ்கால அரசியலில் ஏற்பட்டுள்ள வெறுப்பு காரணமாக அவள் கற்பனை செய்து கொள்கிறாளா என்று இருந்தது.

கோகிலா வீட்டிலிருந்து காரில் மாமாவும் அவனும் திரும்பிக் கொண்டிருக்கையில் மாமா சொன்னது அவன் நினைவுக்கு வந்தது.

''மணல்வெளிகிராமம் தெரியுமில்லையா, உனக்கு?''

மணல்வெளி உத்தமபாளையத்துக்கு நாற்பத்தைந்து மைல் தூரத்துக் கிராமம். ஆயினும், அந்தப் பெயரை அவன் கேட்டிருக்கிறானே அன்றி நேரில் சென்றதில்லை. சொன்னான்.

''அங்கு நீ நாளை போக வேண்டியிருக்கும், கிருஷ்ணமூர்த்தி'' என்றவர் சற்று நேரம் யோசித்து விட்டுப் பிறகு சொன்னார்.

''மணல்வெளி கடற்கரையை ஒட்டிய நிலம் ஒரே தாக்கலாக நூறு ஏக்கருக்கு மேல் வெறும் கரம்பாய்க் கிடக்கிறது. அது சுமார் இருபது முப்பது பேருக்கு மேல் சொந்தம் என்று வைத்துக் கொள். அதில், முதல் கட்டமாக ஒரு முப்பது ஏக்கரை நாம் வாங்கப் போகிறோம்.''

''என்ன மாமா, திடீரென்று விவசாயத்தில் இறங்கி விட்டீர்கள்?''

''நமக்கு எங்கே விவசாயத்தைக் கவனிக்க நேரம்? கீழூரையும், மணல்வெளியையும் ஒட்டிய நிலமெல்லாம் நம்ம சாதி சனத்தாருடையது. பாவம், கால் வயிற்றுக் கஞ்சிக்கும் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். கடன் வாங்கி விவசாயம் பண்ணி என்ன காசு மிச்சம் பண்ண முடியும். வானம் ஒன்று பெய்து கெடுக்கும். இல்லையென்றால் காய்ந்து கெடுக்கும். பலருக்கும் நிலத்தை விற்று நகர்ப் பக்கம் வந்து கடை கண்ணி வைத்துப் பிழைத்துக் கொள்ள விருப்பம். மற்ற சாதிக்காரர்களுக்குப் போவதை விட நீங்கள் வாங்கிக் கொள்ளுங்களேன் என்று நெருக்குகிறார்கள் என்னை. எனக்கு இந்த நில ஆசை எல்லாம் இல்லை மூர்த்தி. கஷ்டப்படுகிறவர்களுக்கு உதவ வேண்டும் என்பது மட்டுமே என் நோக்கம். என்னிடம் காசு இல்லை. ஆனால் ஏற்பாடு பண்ண முடியும். அந்த நிலத்தை உள்ள விலைக்குக் கூடுதலாகவே தொகை கொடுத்து வாங்க விருப்பம். நீ, நம் எம்.எல்.ஏ. கூடலரசனைப் போய்ப் பார். அவனுக்கு எல்லா விவரமும் தெரியும். அவனே, விவசாயிகளை உனக்கு அறிமுகம் செய்து வைப்பான். விஷயம் சிக்கலாகும் போல் இருந்தால், போனில் பேசு. கோகிலா அங்கு வருவாள்.''

''கோகிலாவா?''



''ஏன்?''

''இல்லை. அந்த அம்மாவுக்கு இந்த மாதிரி காரியங்கள் செய்ய முடியுமா என்று நினைத்தேன்.''

''அந்த அம்மாள் எல்லா மாதிரி காரியங் களும் பண்ணும்.''

மாமாவின் மேல் அந்தச் சமயம், மூர்த் திக்கு மரியாதை ஏற்பட்டது உண்மை. விநோ தினி, மாமாவின் இரக்க குணம் தெரியாமல் பேசுகிறாள் என்றே நினைத்தான். விநோ தினி பேச்சு வாக்கில் சொன்னது அசந்தர்ப் பமாக அவனுக்கு ஞாபகம் வந்தது. ''நல்ல வர்களை ஏமாற்றுவது மிகச் சுலபமாக இருக்கிறது, இல்லையா? பெரிய துரதிருஷ் டம், நல்லவர்கள் ஏமாற்றப்படுவதுதான், மூர்த்தி.''

மூர்த்திக்குக் குழப்பமே அதிகரித்தது.

ஓர் இரவு முழுதும் பயணம் செய்து மணல்வெளிக்கு வந்து சேர்ந்தான் மூர்த்தி. ஸ்டேஷனில் இறங்கி, பரிசோதகரிடம் டிக் கெட்டைக் கொடுத்து, வெளியேறி, வீதியில் நின்று யாரை விசாரிக்கலாம் என்று அவன் யோசித்துக் கொண்டிருக்கையில், ஒரு கை அவன் தோளைப் பற்றியதை உணர்ந்து திரும்பிப் பார்த்தான்.

''வணக்கம்! நீங்கள் கிருஷ்ணமூர்த்தி தானே?'' என்றார் அந்த மனிதர்.

சுமார் முப்பது வயது. வெள்ளை ஆடை. அரசியல்வாதிகளுக்கே உரிய அதீத வெண்மை நிறத்தில், முழுக்கைச் சட்டை யும், புரளப் புரள வேஷ்டியும் அணிந்து. அதே நிறத்துப் புன்னகையுமாக நின்றார்.

''ஆமாம். நீங்கள்...?''

''நான் கூடலரசன். உங்களை எதிர்பார்த் துத்தான் நின்றிருந்தேன். உங்கள் மாமா போனில் பேசினார்.''

கூடலரசனின் அம்பாசிடரில் அவர்கள் வந்து கொண்டிருந்தார்கள்.

''நாம் நம் வீட்டுக்குப் போகிறோம். நீங் கள் அங்கு குளிக்கிறீர்கள். சாப்பிடுகிறீர் கள். பத்து மணிக்கு விருந்தினர் மாளிகைக்



குப் போகிறோம். அங்கு உங்களுக்கு ஓர் அறை ஏற்பாடு செய்திருக்கிறேன். நீங்கள் சந்திக்க வேண்டியவர்களில் ஒருவர் — மாரி சாமி — அங்கு வருவார். கீழூர் விவசாயி. அவருக்கு மட்டுமே இருபத்தைந்து ஏக்கர் நிலம் அங்கு உண்டு. சரியாக ஒரு மணிக்குத் தெய்வநாயகம் அய்யா போன் செய்வார் கள். பேரம் படிந்தது என்றால், நீங்கள் அவருக்காக, நீங்களே வாங்குவது போல் பத்திரம் எழுதிப் பணம் கொடுத்து விட வேண்டும். பணம்தானே? நான் தருவேன். சிக்கலானால், இரண்டு மணி பிளைட்டில் கோகிலா புறப்பட்டு வருவாள்.''

மூர்த்திக்குத் திக்பிரமையாக இருந்தது. இவர்கள் எல்லாம் எவ்வளவு துல்லிய மாகக் காரியமாற்றுகிறார்கள் ' என்ற வியப்பே ஏற்பட்டது.

மாரிசாமி பத்து மணிக்கு வரவேண்டி யவர், காலை எட்டு மணிக்கே வந்து காத் திருந்தார். சுமார் அறுபது வயதை எட்டி யிருந்தார். அவர் எனச் சொல்லத் தக்க முதுமை. முகத்தில் வெள்ளைத் தாடி வழிந் தது. சுசக்கிச் சுருட்டிப் பானைக்குள் வைத் திருப்பாரோ என்று ஐயப்படத்தக்கச் சுருக் கம் கண்ட அரைக்கைச் சட்டை. கிருஷ்ண மூர்த்தியைக் கண்டதும் பய பக்தியுடன் எழுந்து வணங்கினார். அவனுக்கு அது சங்கடமாய் இருந்தது.

''உட்காருங்கள்'' என்றதும் அவர் அமர்ந் தார்.

''தெய்வநாயகத்துக்கு நீங்கள் மச்சினன் முறைங்களா?'' என்று அவர் பேச்சைத் தொடங்கினார்.

''ஆமாம்'' என்றான் மூர்த்தி.

''நம்ம ஆட்கள், நம்ம பிள்ளைகள் உசந்த இடத்துக்குப் போயிருக்கிறது கேட்க சந்தோஷமா இருக்கு'' என்றார் அவர். 'நம்ம' என்று அவர் சொன்னதின் அர்த்தம் அவனுக்கு விளங்கிற்று. நாம் தனிச் சாதி, ஒரு சாதி என்பதே அதன் பொருள். தமிழர் கள் ஏன் இப்படிக் குழுக் குழுவாகத் தங் களைப் பிரித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று தோன்றியது அவனுக்கு. நினைக்க மிகுந்த சங்கடமாக இருந்தது.

மாரிசாமி சொன்னார்.

''என் நிலத்தை வித்து விடறதா முடிவு பண்ணிட்டேன் தம்பி. பரம்பரை பரம் பரையா, எங்கள் பாட்டன், பூட்டன் அனு பவித்து, இப்போ என் கைக்கு வந்து சேர்ந்த சொத்து தம்பி அது. அதை விக்கிறது என்ற நினைப்பு வரும்போதே என் மனசு துடிக் கிறது. நீங்கள் எல்லாம் பட்டணக்காரர்கள். நிலம் என்றவுடன் உங்களுக்கு மண்ணும், அதிலிருந்து விளைகிற பயிரும், பயிரை விற்றால் கிடைக்கிற பணமும், அல்லது நிலத்தை விற்றால் கிடைக்கிற பணமும்தான் தெரியும். அதனால்தான் மேலே உயரத்தில் உட்கார்ந்து கொண்டு, தீவனம் போடுங்கள், உரம் போடுங்கள், பூச்சிக் கொல்லி மருந்து போடுங்கள் என்று எங்களுக்கு உத்தரவு போட்டுக் கொண்டு இருக்கிறீர்கள். ஆனால் எங்களுக்கோ நிலம் என்பது மானம். உசுரை விட பெரிது மானம் அல்லவா? பரம்பரையா, கட்டிக் காத்து வருகிற கௌரவம் அது. தம்பி, உழுதவன் கணக்குப் பார்த்தா உழக்கு கூடத் தேறாது என்று சொல்லடை கேட்டிருப் பீர்களே! உண்மைதான் அது. வானம் காய்ந்தா காய்ந்து கெடுக்கும். பேஞ்சா பேஞ்சு கெடுக்கும். நம்ம மண்ணுலேதான் தண்ணீர் ஊறுவது இல்லையே. மலடி மார்பும் திறக்கும் என்று மண்ணைக் கிளறி விதையைத் தூவுவோம். மழை வராது. வெக்கைதான் வீசும். கடன் சொல்லி விதை. கடன் சொல்லி உரம். கடன் சொல்லி வாழ்க்கை. விளையறது கடனுக்குக் கட்டி வராது, மீண்டும் கடன். அரசாங்கம் கொடுத்தா என்ன, வட்டிக் கந்தன் கொடுத்தா என்ன? பொழைப்பு கடன்காரப் பொழப்புதானே!

''தம்பி, எம்மவனைப் பட்டணத்துக்குப் படிக்க அனுப்பினேன். ஒழுங்கா என்னால் அவனுக்குப் பணம் அனுப்ப முடியல்லை. பிள்ளை பசிக்கு என்ன பண்ணினான் தெரி யுமா? அவனே விளையாட்டா ஒரு நாள் சொன்னான். காலேஜுக்குப் பக்கத்துலே ஒரு பகோடா கடை இருக்காம். காலை பத்து, பதினோரு மணிக்குச் சூடா பகோடா போடுவாங்களாம். நேரம் அறிஞ்சு, வாசனை அறிஞ்சு, டக்கென்று அந்த நேரம் பார்த்துப் போய் ஒரு ரூபாய்க்கு அதுவும் கடனா — பகோடா வாங்கிச் சுடச்சுட, எண்ணெய் கூட வழியாமல், சாப்பிட்டு விடு வானாம். அந்த மாதிரி சாப்பிட்டால், பகோடா செரிக்கப் பல மணி நேரம் ஆகு மாம். பசிக்காதாம். மத்தியான சாப்பாட் டைத் தள்ளிப் போட அவன் கண்டுபிடித்த வழி இது. அதைக் கேட்டப்போ, என் மனசு பட்ட பாடு அந்தக் கடவுளுக்குத்தான் தம்பி தெரியும். ஒரு தகப்பனோட கடமையைக் கூடச் செய்ய முடியவில்லையே என்று எனக்கு எவ்வளவு அவமானமாப் போச்சு தெரியுமா? நிலம் இருந்து என்ன? பொண் ணுங்க கல்யாணத்துக்குப் பட்ட கடன், பிள்ளை படிப்புக்குப் பட்ட கடன் எல்லாம் இந்த பூமியை வச்சுத்தான். எனக்கு வெறுத் துப் போச்சு தம்பி. பிள்ளை பட்டணத்தில் வேலை பார்க்கிறான். அவன் சம்பளம் அவனுக்குக் காணலை. பட்டண வாசம் குபேர வாசம்னு சொல்வாங்களே! ஏதோ சொந்த வீடு கட்டிக்கப் பணம் தராங்களாம். இவன் கொஞ்சம் போடணுமாம். பணம் கேட்டு எழுதியிருக்கான். ஆக, பூமியை வித்து, கடனைப் பைசல் பண்ணிட்டு, பிள்ளையோட போய்ச் சேர்ந்துடலாம்னு நினைக்கேன்.''

அவர் சொல்லி நிறுத்தினார்.

''தாகத்துக்கு ஏதாவது கெடைக்குமா?'' என்றார். மணி ஒலித்துப் பையனை அழைத்து அவருக்குக் காப்பி வரவழைத்துக் கொடுத்தான் மூர்த்தி.

''காலையில் ஆபீஸ் கிளம்பினேன் — 'பரந்து' மழை வந்துவிட்டது. பஸ் ஸ்டாப்புக்கு வந்தேன்— 'பரந்து' பஸ் கிளம்பிவிட்டது. லீவு போடலாம் என்று நினைத்தேன். — 'பரந்து' இன்று எம். டி. வருகிறார்...''

''போதும். நிறுத்து. டீ. வி. யில் மகாபாரதம், ராமாயணம் பார்ப்பது எல்லோருக்கும் தெரியும்!''

— எஸ். மோகன்.



''தம்பி! நிலம், உங்க கைக்கு வந்த பிறகு என்ன செய்யறதா உத்தேசம்? நான் இதைக் கேட்கப்படாது.. பெண்ணைக் கட்டிக் கொடுத்த பிறகு, அப்பனுக்கு அவள் மேல் என்ன பாத்தியதை? இருந்தாலும் மனசு துடிக்கிறது. நீங்களும் வெள்ளாமை பண்ணுவீங்களா?''

மூர்த்தி அது குறித்து யோசித்திருக்கவில்லை. எனினும் சொன்னான்.

''வெள்ளாமைதான் பண்ணப் போறோம்''

''செய்யுங்கள்! மகராஜனாய் இருப்பீர்கள்! சில பேர் செய்கிற மாதிரி, பூமியை அழிச்சு வீடு கட்டுகிறார்களே, அந்தப் பாவத்தை நீங்கள் செய்து விடாதீர்கள். ஆத்தா முகத்தில் பள்ளம் தோண்டிக் கல் அடுக்கிறது பாவம் இல்லையா? நாட்டில் நிலமா இல்லை? அங்கே வீடுகளைக் கட்டிக் கொண்டு குடியிருந்தால் என்ன? விளை நிலத்தை வீடாக்குகிறார்கள், பாவிகள்! இந்தக் காடு, கட்டாந்தரையைப் பண்படுத்தி, பூமியாக்க நமது முன்னோர்கள் என்ன பாடுபட்டிருப்பார்கள்? அவர்கள் நெற்றி வியர்வையை விதைத்து அல்லவா மண் மாதாவிடம் வரம் கேட்டார்கள். அரசாங்கம் கூட இதையெல்லாம் கவனிக்க மறுக்கிறதே என்ன பாவம். என்ன பாவம்.''

மூர்த்திக்கு அப்பாவின் நினைவு வந்தது. அவர்கூட இப்படித்தான். ஒருமுறை செருப்புக் காலோடு பூமிக்கு வந்து விட்ட அவனைப் பார்த்து, எவ்வளவு வேதனைப் பட்டார் அப்பா! 'பூமிதான் நம்மைப் போல விவசாயிக்குக் கோயில் தம்பி. கோயிலுக்குள் செருப்பு போட்டுக் கொண்டு நுழையலாமா?' என்றவர் அவர். இந்த மாரிசாமிக்குப் பூமி, அன்னையென்றால் அப்பாவுக்கு அது கோயில். குழந்தையெல்லாம்.

கூடலரசன் வியாபாரப் பேச்சைத் தொடங்கினார். வழக்கத்தில் உள்ள விலைக்குக் கூடுதலாக ஏக்கர் ஒன்றுக்குப் பத்தாயிரம் தருவதாகச் சொன்னார் கூடலரசன்.

மாரிசாமி நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''கூடுதலாகவா? எதுக்குங்க?'' என்றார் அவர் ஆச்சர்யமுடன்.

''உங்களுக்கு உபயோகமாக இருக்கட்டும் என்றுதான்.''

''உபயோகம்னா? எனக்கு விளங்கலையே!''

''உங்களுக்குக் கஷ்டம் இருக்கும்.''

''என் கஷ்டம் எப்பவும்தான். அதுக்காக நான் உங்களிடமிருந்து யாசகம் வாங்கறது நியாயமா? தம்பி, நீங்கள் சொல்லுங்களேன்?''

மூர்த்தி மௌனம் சாதித்தான்..

''ஊரில் என்ன விலையோ அதைக் கொடுங்கள், போதும். அதற்கு மேல் சல்லிக்காசு எனக்கு வேண்டாம்.''

உறுதியாக இருந்தார் மாரிசாமி.

பத்திரம் பதிய ஒரு தேதியும் முடிவாயிற்று.

கூடலரசன் ஆயிரத்தி ஒரு ரூபாய் பணம் எடுத்து அவரிடம் கொடுத்தார்.

''இது எதுக்குங்க?''

''அச்சாரமாய் இருக்கட்டும்''

''அச்சாரம்னா?''

''நிச்சயப்படுத்திக் கொள்கிறதுக்கு என்று வைத்துக் கொள்ளுங்களேன்.''

''அதுதான் நிச்சயம் ஆயிடுச்சே.''

''அதை உறுதிப்படுத்திக்கத்தான்.''

''உறுதி மனசுக்குள்ளே இருக்குங்க. வாய் வார்த்தை சொன்ன பிறகு அப்புறம் என்னங்க அச்சாரம்? பேச்சு மாறுகிற மனுஷன் ஒரு மனுஷனா? அயோக்கியனுக் கல்லவா பத்திரமும் சாட்சியும்? யோக்கியனுக்கு எதுக்கு?''

மாரிசாமி அச்சாரம் பெற்றுக் கொள்ளவில்லை. ''பேசிய தொகையைப் பத்திரத்தில் கையெழுத்துப் போட்டு விட்டு வாங்கிக் கொள்கிறேன்'' என்றார்.

அடுத்த சில நாட்களுக்குள்ளேயே பத்திரமும் கையெழுத்தாகிப் பதிவாயிற்று. பதிவாளர் முன் கையெழுத்துப்போடப் பேனாவைக் கையில் எடுத்த மாரிசாமியின் கைகள் நடுங்கின. அது முதுமை காரணமாய் அல்ல! கண்களில் இருந்து அவரை அறியாமல் நீர் பெருகி வழிந்தது. கையெழுத்தைப் போட்டுப் பேனாவை மேஜை மேல் வைத்தவர், மேல் துண்டால் முகத்தை மூடிக் கொண்டு குலுங்கினார். எல்லாம் சில நிமிஷங்கள் தான். தானாகவே தன்னைத் தேற்றிக் கொண்டார் போலும்.

''மன்னிச்சுக்குங்க, தம்பி! ஏதோ குழந்தையாட்டம் பொங்கிட்டேன். குழந்தைதான். பூமி கூட குழந்தைதான். குழந்தையை விக்கிற மாதிரி, வித்துட்டேன்'' என்றவர் சிரித்தார்.

(தொடரும்)

# நீ கூடவா அம்மா!

கிராமத்துப் பக்கம் போய்த் திரும்பி வரும்போது கூடவே ஒரு பெண்ணைக் கூட்டி வந்தார்.

அந்தப் பெண்ணுக்கு வயது பதினெட்டு இருக்கும். ஒரு சீட்டிப்பாவாடை, சட்டை, மேலே சற்றுக் கிழிந்த தாவணி அணிந்திருந்தாள். அவளுடைய உடைமைகள் எல்லாம் அவள் தோள்பட்டையிலிருந்து ஆடிய சிறு பையில் அடங்கியிருந்தன.

''இவள் தான் இந்த வீட்டு எஜமானி. நன்றாகக் கவனித்துக்கொள்!'' என என்னை அவளுக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

முகத்தில் கடுப்புடன் ''வா'' என வரவேற்றேன்.

என்னைத் தனியாக அழைத்துப் போய் அவர் சொன்னார். ''இந்தப் பெண் பெயர் கலா. பத்தாவது வரை படித்திருக்கிறாள். என் சிநேகிதர் தணிகாசலம் என்று உன்னிடம் கூடச் சொல்லியிருக்கிறேனே.... அவனுடைய கடைசிப்பெண். தணிகாசலம் போய்ச் சேர்ந்து மூன்று மாதங்கள் ஆகின்றன. குடும்பம் ரொம்பவும் சிரமப்படுகிறது. உனக்கு உதவியாக இருக்கட்டும் என்றுதான் அழைத்து வந்தேன். ஒரு பிடி அரிசி கூடப் போட்டால் ஆயிற்று.... இவளுக்கென்று தனியாகச் சமைக்கப் போகிறோமா, என்ன?'' என்றார்.

அவர் சொல்லி நான் மறுத்துப் பேசியது கிடையாது. தொண்டை வறண்டு போகும் வரைவாதாடினாலும்கூட தான் நினைத்ததை மாற்றிக் கொள்ள மாட்டார். தான் பிடித்த முயலுக்கு மூன்றேகால் எனச் சாதிப்பார்.

மனிதருக்குக் கொஞ்சமாவது யோசனை வேண்டாமா? வீட்டில் மூன்று பிள்ளைகள்... 28, 25, 22 வயதில். வயசுப் பெண், பார்க்கத் தளதளவென்று இருக்கிறாள்.

பஞ்சையும் நெருப்பையும் பக்கத்தில் வைத்துவிட்டு — அப்புறம் தப்புத்தண்டா ஏதாவது நடந்து விட்டால் என் தலைதானே உருளும்!

அந்தப் பெண்ணைத் தனியாகக் கூப்பிட்டேன். என்னுடைய பழைய புடைவைகள் இரண்டைக் கொடுத்துப் பாவாடை, தாவணிக்குப் பதில் உடுத்தச் சொன்னேன். இப்போது அவள் வனப்பு மேலும் கூடியது. ''கலாவா! பலே!'' என இவரே பாராட்டிவிட்டுப் போனார்.

''மாடிப்பக்கம் போகக் கூடாது. பையன்களுடன் பேசிக் கொண்டு நிற்கக்கூடாது. அவர்கள் வீட்டில் இருக்கும் போது சமையலறையை விட்டு வெளியே தலையைக் காட்டக் கூடாது'' என்றெல்லாம் மிரட்டி வைத்தேன்.

இப்போதெல்லாம் நான்தான் அதிகம் சிரமப்பட்டேன். வீட்டை விட்டு வெளியே அரைமணி நேரம் கூடப் போகமுடியவில்லை. எங்கு போனாலும் கலாவையும் அழைத்துப்போக வேண்டியிருந்தது. பார்த்தவர்கள் எல்லாம் யார் என்று கேட்காமல் இல்லை. ''வேலைக்காரப் பெண்'' என்றா சொல்ல முடியும். ''ரொம்பவும் வேண்டப்பட்டவர் பெண்'' எனத்தான் சொல்லிச் சமாளிக்க வேண்டி வந்தது.

''ஏண்டி கல்பகம்! பெண் மூக்கும் முழியுமாகத் தங்க விக்ரகம் மாதிரி இருக்கிறாளே.... பெரியவனுக்குப் பாரேன்!'' என நேரிலேயே சொல்லி விட்டாள் ஒருத்தி.

சும்மா சொல்லக் கூடாது! பெண் நல்ல துறுதுறு... என்னை ஒரு காரியம் செய்ய விடுவதில்லை. எது செய்தாலும் அதில் ஒரு நறுவிசு இருந்தது. நான்கு நாட்கள் சமையற்கார அம்மாள் மட்டம் போட்டபோது அவள்தான் சமைத்தாள். அப்பாவும் பிள்ளைகளும் கேட்டு வாங்கிச் சாப்பிட்டார்கள்.

அன்றைக்கு மூன்று பையன்களும் சினிமா போய்விட்டார்கள். திரும்பி வர இரவு ஒன்பதரை ஆகும். கலாவை மட்டும் வீட்டில் வைத்துவிட்டுப் பக்கத்துத் தெரு தோழி — ரொம்ப நாட்களாகக் கூப்பிட்டுக் கொண்டிருந்தாளா — பார்த்து விட்டுவரப் போயிருந்தேன்.

எட்டு மணிக்கு வீடு வந்தால் ஒரே சிரிப்பும் கொம்மாளமும். டிக்கெட் கிடைக்கவில்லை என மூன்று பேரும் ஏழு மணிக்குத் திரும்பி விட்டார்கள். கலாவையும் நான்காவது நபராகச் சேர்த்துக்கொண்டு கேரம் ஆடிக் கொண்டிருந்தனர்.

அவளும் — கொஞ்சம் கூட யோசனை இல்லாமல் — சரிக்குச்சரி உட்கார்ந்து — விழுந்து விழுந்து சிரித்துக்கொண்டு.....

ஸரோஜி

"கலா!" என அழைத்தேன் கோபமாக.

"அவள் இப்போ வரமாட்டாள். கேம் இன்னும் முடியவில்லை" என்றான் சின்னவன்.

வேறு என்ன செய்யட்டும்? நான் காவலுக்கு அங்கேயே உட்கார்ந்து விட்டேன். என் பிள்ளைகள் தான் சபலப்பட்டுப் போனார்களோ... இல்லை — என் பார்வையில் தான் மோசமோ? அவர்கள் கலாவை அனாவசியமாக உற்று உற்றுப் பார்ப்பது போல் தெரிந்தது. அந்தப் பெண்ணும் ரொம்பச் சுதந்திரமாகப் பழகுவது போல் பட்டது.

இன்னொரு நாள் பெரியவர்கள் இருவரும் ஆபீஸுக்குப் போய்விட்டார்கள். சின்னவன் காலேஜுக்கு. யாரும் வரப்போவதில்லை என்ற தைரியத்தில் வீட்டைக் கலாவின் பொறுப்பில் விட்டுப் போனேன்.

திரும்பி வந்து பார்த்தால் —

கட்டிலின் மேல் பனியன் கூடப் போடாமல் இவர் படுத்திருந்தார். இந்தப்பெண் — முதுகைப் பிடித்து விட்டுக் கொண்டிருந்தாள்.

இதற்கு நிச்சயம் முடிவு கட்ட வேண்டும்.

நயமாகச் சொன்னால் இவர் கேட்கமாட்டார். இந்த 'வியாதி'க்கு சஸ்திர சிகிச்சைதான் சரி.

கலாவின் மேல் ஏதாவது திருட்டுப் பட்டம் கட்டித்தான் வெளியே அனுப்ப வேண்டும். எனக்கே தெரிகிறது.... நான் செய்ய நினைப்பது தப்புத்தான், பாவம் தான். பெரிதாக ஒரு விபரீதம் நடப்பதைத் தடுக்க எனக்கு வேறு வழி தெரியவில்லை. அடுத்தமுறை திருப்பதி போகும் போது 'அபராதக் காணிக்கை' போட்டு விடுவதாக நேர்ந்து கொண்டேன்.

இரவு பத்து மணி. எல்லோரும் தூங்கப் போய்விட்டார்கள். என் கைவளையல்கள் ஒரு ஜோடியைக் கழற்றினேன். உள்ளே கலாவின் பை அலமாரியின் அடித்தட்டில் இருந்தது. அதனுள்ளே போட்டுவிட்டு மௌனமாகத் திரும்பிவிட்டேன்.




படுத்து விட்டேனே தவிர, உறக்கம் வரவில்லை. தப்புச் செய்வது என்பது கூடச் சுலபமான காரியம் இல்லை என்று எனக்குப் புரிந்தது.

மறுநாள் காலை. எப்போது ஆரம்பிப்பது.... எப்படியும் அவர் ஆபீஸுக்குப் புறப்படுமுன் இந்த 'நாடகத்தை' நடத்தியாக வேண்டும். பெரியவன் எங்கேயோ ஆபீஸ் வேலையாகக் 'காம்ப்' இருக்கிறது என விடியற்காலை ஆறு மணிக்கெல்லாம் புறப்பட்டுப்போய் விட்டான்.

மணி எட்டு அடித்தது.

"ஏன் கலா! என் வளையல்கள் இரண்டு — இந்த அலமாரியில் கழற்றி வைத்திருந்தேன். உன் கண்ணில் பட்டதோ?" எனக்கேட்டேன் சாதாரணமாக.

"இல்லையே.... மாமி!" எனக் கூறியவள் தொடர்ந்து காய்கறிகளை நறுக்கலானாள்.

நான் எங்கெல்லாமோ தேடுவதாகப் பதினைந்து நிமிடங்கள் போக்குக் காட்டிவிட்டு மெதுவாக அவரிடம் விஷயத்தைச் சொன்னேன்.

அவரும் உடன் வந்து தேடிப்பார்த்தார். "எங்கேயாவது வைத்துவிட்டு எங்கேயாவது தேடிக் கொண்டிருந்தால் எப்படி! கவனமாகப் பார்!" என்றார்.

"இங்கேதான் வைத்தேன். எனக்கு நன்றாகக் கவனம் இருக்கிறது..." என்று அலமாரியைத் தட்டிக் காட்டினேன்.

எங்கள் பேச்சைக் கவனித்த சமையற்கார அம்மாள் 'விடுவிடு'வென்று உள்ளே போய்த் தன் பெட்டியைக் கொண்டு வந்து தலைகீழாகக் கொட்டினாள்.

எங்கள் வீட்டில் பத்து வருஷங்களாக வேலை பார்ப்பவள்.

"நீங்கள் நன்றாகப் பார்த்துக் கொள்ளுங்கள். மனத்தில் ஒரு சின்னச் சந்தேகம்கூட இருக்கக் கூடாது, பாருங்கள்!" என்றாள்.

"நான் உங்களைத் தப்பாக ஏதும் சொல்ல வேயில்லை!" என நான் இடைமறித்தும் ஒவ்வொன்றாக உதறிக் காட்டினாள்.

எதுவுமே நடவாதது போல் கலா தன் தலையைக் குனிந்தவாறு தன் வேலையில் ஈடுபட்டிருந்தாள். நான் அவளை உற்றுப் பார்ப்பதை என் கணவர் புரிந்து கொண்டார்.

"இதோ பாரம்மா கலா! நீயும் உன் பையை உதறிக் காட்டி விடு... மாமியின் சந்தேகம் போகட்டும்!" என்றார்.

"பை என்னிடம் இல்லையே, மாமா!" என்றாள் அவள்.

பை இல்லையா! நேற்று இரவு கூட இருந்ததே...

''உங்கள் பெரிய பிள்ளை 'காம்ப்' போகும் போது அதை எடுத்துப் போவதாகச் சொன்னார். ஏதோ பைல்கள் வைக்க வேண்டுமாம். என் சாமான்களை அலமாரியில் தனியாக எடுத்து வைத்திருப்பதாகச் சொன்னார்.''

நான் அலமாரியைப் போய்ப் பார்த்தேன். கலா சொன்னது சரிதான். பை அங்கே இல்லை.

என்னுடன் வந்த கலா தன் துணிகளை உதறிக் காண்பித்தாள்.

வளையல்கள் அங்கு இல்லை.

நான் அதிர்ந்து போனேன். மெல்லவும் முடியவில்லை. விழுங்கவும் முடியவில்லை.

**நா**ன்காம் நாள் என் பிள்ளை திரும்பி வந்தான்.

அவன் பெட்டியில் மடித்து வைக்கப் பட்டிருந்த பையை எடுத்தான். ''இதைக் கலாவிடம் கொடுத்து விடு!'' என்றான்.

நான் அவனையே பார்த்தபடி நின்றேன்.

''என்ன அப்படிப் பார்க்கிறாய்?''

''ஒன்றுமில்லை.''

இவனிடமும் வளையல்கள் இல்லையா..? அப்படியானால் அவை எங்கே போயிருக்கும்? ஐந்து பவுன் வளையல்கள். இன்றைய விலைக்குக் கிட்டத்தட்ட பதினைந்தாயிரம் ரூபாய். ஐயோ, எதையோ நினைத்து எப்படியோ ஆரம்பித்து, இப்படி முடிந்து விட்டதே.

மதியம் உணவு முடிந்த பிறகு இதையே நினைத்தபடி படுத்திருந்தேன். மூத்தவன் அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான். கதவை மூடித் தாளிட்டான்.

தன் சட்டைப் பையிலிருந்து அந்த வளையல்களை என்னிடம் கொடுத்தான்.

''இது எப்படி உன்னிடம்?'' — என ஒன்றும் தெரியாதவள் போல் கேட்டேன்.

''நீ எங்கே கொண்டு போய் வைத்தாயோ அங்கிருந்துதான் எடுத்தேன்'' என்றான் அமைதியாக.

''முரளி..'' எனப் பதறினேன்.

''அம்மா... அன்று பூனை போல் அந்தப் பக்கம் இந்தப் பக்கம் பார்த்து வளையல்களைக் கலாவின் பையில் திணித்தாயே நான் அதைப் பார்த்தபடிதான் இருந்தேன். உன் எண்ணம், திட்டம் எல்லாம் புரிந்தது. மறுநாள் காலை இங்கு என்ன நடக்கும் என்பதையும் என்னால் ஊகிக்க முடிந்தது. நம் வீட்டில் இல்லாததா பையும், பெட்டியும்? வேண்டுமென்றே கலாவின் துணிகளைத் தனியாக எடுத்து வைத்து அந்தப் பையை எடுத்துப் போனேன். ஆமாம், அம்மா! அந்தப் பெண் என்ன தப்புச் செய்தாள்? எதற்கு இந்த அவப் பெயர்...! நீ கூடவா

> **''அந்த ஆபீஸ்ல நமக்கு அன்பளிப்புத் தருவாங்களாமே நிஜமா...?''**
>
> **''ஆமா... அம்பது ரூபாய் லஞ்சம் கொடுத்தா அழகான பால்பாயின்ட் பேனா; நூறு ரூபாய் லஞ்சம் குடுத்தால் 'ஹேண்ட் பேக்!ஆயிரம் ரூபாய்க்கு பிரீஃப் கேஸ்ன்னு தினுசு தினுசாப் பரிசு!**
>
> **— இம்ரான்கான்.**

இப்படி... அம்மா! என்னால் நம்பவே முடியவில்லையே!'' என்றான்.

''தப்புத்தாண்டா... தப்புத்தாண்டா... ஒரு தப்பு நடக்காமலிருக்க இன்னொரு தப்புச் செய்தது பெரிய தப்புத்தான்!'' எனக் கதறினேன்.

''உன் மனசு எனக்குப் புரிகிறது அம்மா! என் வருத்தம் எல்லாம் உனக்கே உன் பிள்ளைகள் மேல் நம்பிக்கை இல்லையே என்பதுதான். நாங்கள் என்ன பெண்களையே பார்க்காதவர்களா! இல்லை, அவர்களுடன் பழகாதவர்களா? என்னுடன் ஆபீஸில் எத்தனை பெண்கள் வேலை பார்க்கிறார்கள்? தம்பியுடன் எத்தனை பெண்கள் படிக்கிறார்கள்! கெட்டுப் போக வேண்டும் என்றால் எப்போது வேண்டுமானாலும் நடக்கலாம். அம்மா... நீ என்ன வேலி போட்டாலும் அது உடைந்து விடும்...''

நான் என்ன பதில் சொல்வது எனப் புரியாமல் விழித்தேன்.

''அந்தப் பெண் நம்மை நாடி வந்திருக்கிறாள்.. நாம் அவளை ஆதரித்துத்தான் ஆக வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. வேண்டாம் என்றால் பக்குவமாகச் சொல்லி அனுப்பி விடு. இந்த மாதிரியெல்லாம் அவமானப்படுத்தி அழ வைத்து அனுப்ப வேண்டாம். 'நல்ல பெண், படித்தவள். உட்கார்ந்து சாப்பிடவில்லை... கெட்டிக்காரி... அத்தனை வேலைகளையும் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்கிறாள்' என்று வாய்க்கு வாய் நீயே புகழ்ந்து பேசி இருக்கிறாய். அவள் எதிர்காலத்தைத் தயவு செய்து பாழடித்து விடாதே!''

ஒவ்வொரு வார்த்தையும் என் நெஞ்சில் ஈட்டியைப் போல் பாய்ந்து எனது சந்தேக அரக்களை வீழ்த்திக் கொன்றது.



வண்ணப்படம்: யோகா.

## மடமையைக் கொளுத்துவோம்!



மாலினி சேஷாத்ரி.

# கணவன்மார்களே! கொஞ்சம் கவனியுங்கள்!

''விபத்துக்களைத் தவிர்க்க, கணவனை நேரத்தோடு அலுவலகத்துக்கு அனுப்பி வைக்க மனைவி ஏற்பாடு செய்ய வேண்டும்.''

— சில மாதங்களுக்கு முன்பு டெல்லி போக்குவரத்துப் போலீஸார் வெளியிட்டிருந்த விளம்பரம்!

''ஒவ்வொரு நாளும் காலை வேளையில் எனக்கு ஒரே டென்ஷன்தான்!'' என்கிறார் உஷா. ராத்திரி எவ்வளவு நேரம் கழித்துப் படுக்கப் போனாலும், எவ்வளவு சோர்வாக இருந்தாலும் காலைல அஞ்சு மணிக்கெல்லாம் எழுந்து கணவர் ஆபீஸ் போகவும் குழந்தைகள் ஸ்கூலுக்குப் போகவும் உதவ வேண்டியிருக்கு. காலை சாப்பாடு மட்டுமின்றி மதியத்துக்கு டிபனும் செய்து, கட்டிக் கையில குடுத்து, அனுப்ப வேண்டியிருக்கு. ஒரு வழியா எல்லாரும் வீட்டை விட்டுப் போகறதுக்குள்ள நான் ஆஞ்சு ஓய்ஞ்சு போயிடறேன்.''

''நீ அதிர்ஷ்டசாலி உஷா!'' என்கிறார் கமலா. ''கணவரையும் குழந்தைகளையும் அனுப்பிய பிறகு கொஞ்சம் நேரமாவது உனக்கு ஓய்வு கிடைக்கும். ஆனால் நானோ, நீ செய்யற எல்லா வேலைகளையும் செய்யறேன். போதாததுக்கு என் கணவருக்கு ஸாக்ஸ் தேடித் தந்து, குழந்தைகளுக்கு ஸ்கூல் புத்தகங்களைத் தேடி எடுத்துக் கொடுத்து ஒரு மாதிரி நானும் தயாராகி, குழந்தைக்கு வேண்டிய பால் பவுடர் சமாசாரங்களை எடுத்து வைத்து, குழந்தையைக் கொண்டு போய்க் காப்பகத்தில் விட்டுட்டு அப்புறம் நானும் ஆபீஸ் போறேன்! ஒவ்வொரு நாளும் நேரம் தவறாமல் போகறது பெரிய போராட்டம்தான்'' — இது கமலாவின் அங்கலாய்ப்பு.

இந்தியா முழுவதிலும் ஆயிரக்கணக்கான கமலாக்களும் உஷாக்களும் இப்படி அன்றாடம் போராடிக் கொண்டிருக்கிறார்கள். ஒரே சமயத்தில் பல முக்கியமான வேலைகளைக் கச்சிதமாகச் செய்ய வேண்டியிருப்பதால் உருவாகும் போராட்டம். வாழ்க்கையில் சில சாதனைகளைப் புரிய அவர்கள் விரும்பினாலும் முதலில் தாய் என்ற ஸ்தானத்திற்கும் மனைவி என்ற ஸ்தானத்திற்கும் உரிய கடமைகளை அவர்கள் மறப்பதில்லை — மறக்க மாட்டார்கள்.

அதனால், டெல்லி போலீஸ் வெளியிட்டுள்ளதைப் போன்ற விளம்பரம் இந்தச் சுமைதாங்கி மனைவிகளை நோக்கிச் சொல்ல முயல்வது என்ன? அப்பெண்கள் சோம்பேறித்தனமாகவும் அசிரத்தையாகவும் இருக்கிறார்கள் என்றா? அல்லது இவர்கள் இன்னும் கடுமையாக முயன்று, கணவன்மார்களுக்குக் கடமையாற்ற வேண்டும் என்றா? அல்லது கணவர்கள் வேலைக்குச் செல்லும் வழியில் ஏதேனும் விபத்து நேர்ந்தால் அதற்கு இப் பெண்களே பொறுப்பு என்றா?

உஷாக்களுக்கும் கமலாக்களுக்கும் டெல்லி போலீசின் அறிவிப்பைப் படிக்கக் கூட நேரமிராது என்பது ஒருபுறமிருக்க, இத்தகைய முட்டாள்தனமான விளம்பரம் நம் சமுதாயத்தைப் பீடித்துள்ள தீரா



நோயின் மற்றும் ஓர் அறிகுறிதான்... பெண்கள், வீட்டிலும் வெளியேயும் சக்திக்கு மீறி உழைக்க வேண்டும்; அவ்வாறு உழைப்பதைக் குறித்துக் குறைப்பட்டுக் கொள்ளக் கூடாது, என்று எதிர்பார்ப்பதுடன் ஆண்களுக்கு இணையான அந்தஸ்தை அவர்களுக்கு அளிக்காமல் அவர்களைத் தாழ்வான நிலையிலேயே வைத்திருந்து குடும்ப வட்டத்தில் ஏதேனும் கோளாறு ஏற்பட்டால், அதற்கான பழியையும் அவர்கள் மீதே சுமத்தும் தீரா நோயின் அறிகுறி!

கணவன்மார்கள் இந்த விளம்பரத்தைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். தன்மானம் படைத்த எந்த ஆணுமே, மனைவியின் உதவியின்றி, தான் அலுவலகத்துக்கு நேரத்தோடு போக முடியாது' என்று மறைமுகமாகக் கூறும் இவ்விளம்பரத்தை எதிர்ப்பான். ஒரு பச்சைக் குழந்தைக்கு இணையாகத் தன்னைச் சித்திரிக்கும் இவ் விளம்பரத்தைப் பொருட்படுத்தாமல், வீட்டு வேலைகளை மனைவியுடன் பகிர்ந்து கொண்டு அவள் சுமையைக் குறைப்பதுடன் நேரம் தவறாமல் வேலைக்குப் புறப்படுவான். மனைவியும் குழந்தைகளும் தன்னைப் போலவே நேரம் தவறாமல் தத்தம் பணியிடங்களுக்குப் போய்ச் சேர முடிந்தது குறித்துப் பெருமையும் நிறைவும் அடைவான்.

கணவன்மார்களின் ஒத்துழைப்பு இல்லாததால் தாமதமாக வேலைக்குப் போய்ச் சேரும் பெண்கள் ஏராளம். அரசாங்கத்தில் உயர் அதிகாரியாக உள்ள ஒரு பெண் சொல்கிறார்: ''பெண் ஊழியர்கள் சில நிமிடங்கள் தாமதமாகப் பணிக்கு வந்தால் நான் கண்டு கொள்வதில்லை. அவர்கள் தங்கள் வேலைகளை ஒழுங்காகச் செய்து முடிக்கிறார்களா என்பதைத்தான் முக்கியமாகக் கவனிக்கிறேன். ஏனெனில், காலை வேளைகளில் அவர்கள் கிடந்து அல்லாடுவது பற்றி எனக்குத் தெரியும்...'' என்கிறார்.

டெல்லி போலீசார் இந்தப் பெண் அதிகாரியைச் சந்தித்துப் பேசுவது நல்ல பலனைத் தரக்கூடும். ஏனென்றால் அவசர அவசரமாக முண்டியடித்துக் கொண்டு வேலைக்குப் போகும் பெண்களுக்கும் விபத்துக்கள் நேரலாம் அல்லவா? இதைக் கருத்தில் கொண்டு விளம்பரத்தை இப்படி மாற்றி எழுதலாம்:

'டெல்லி மக்களே! உங்கள் நேரத்தைச் சீராக நிர்வகித்து, முன்கூட்டியே வேலைக்குப் புறப்படுங்கள். நிதானமாகச் சென்று விபத்துக்களைத் தவிர்க்கலாம்.'

— **மாலினி சேஷாத்ரி.**

# பழமையான மனிதர்



● உலகின் மிகப் பழமையான மனிதர் இவர்தான்.

'கெல்லாபாய் ரதவா' என்பது இவரது பெயர். குஜராத் மாநிலம் பரோடாவுக்கு அருகில் சோடா உதய்பூர் என்ற கிராமத்தில் வசிக்கிறார். இவருக்கு இப்போது வயது 149. இந்த வயதை எப்படி நிர்ணயித்தார்கள்?

ஒரு முறை குஜராத்தில் மிக பயங்கரமான பஞ்சம் வந்தது. அதன் கொடுமைகளைப் பற்றியும், அப்போதைய அனுபவங்களையும் இவர் கூறுகிறார். அப்போது இவருக்கு வயது 17. குஜராத்தில் பஞ்சம் வந்த ஆண்டு 1856. இதை வைத்து இவரது வயதை 149 என்று நிர்ணயித்திருக்கிறார்கள்.

நன்றி: இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி.
தகவல்: முருகு.

● இந்தியாவில் கூரியர் சர்வீஸ் தொடங்கி, பன்னிரண்டு ஆண்டுகள் ஆகின்றன. இன்று இத்துறையில் சுமார் எழுபது கம்பெனிகள் ஈடுபட்டுள்ளன. இதில் பதினைந்து கம்பெனிகளுக்கு அகில உலகத் தொடர்பு உண்டு.

— டைம்ஸ் ஆஃப் இந்தியா.
— **மிதுனம்.**

# இதர எல்லா ஹேர் டைகளையும் சேர்த்தாலும் அவற்றைவிட ஏராளமான மக்கள் உபயோகிப்பது கோத்ரெஜின் தானே - பரவும் ஹேர் டை

**அவற்றிற்கான 3 சிறந்த காரணங்கள்**




இரண்டு கேசரஞ் சாயல்களில் கிடைக்கிறது:
பிளாக் மற்றும் டார்க் பிரவுன்

**1** கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டை கேசத்திற்கு இயல்பான வண்ணத்தையும், தோற்றத்தையும் தருகிறது. இதிலே ஒரு உள்ளிணைந்த கண்டிஷனர் உள்ளது; இது கேசத்தை மென்மையோடும் படிமானத்தோடும் வைத்துக்கொள்ள உதவுகிறது. உண்மையிலேயே, நீங்களே சொன்னால் ஒழிய ஒருவரும் அறிந்துகொள்ள முடியாது.

**2** இதர ஹேர் டைகளைப் போல் அல்லாமல், கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டை உபயோகிக்க எளிதானது, வசதியானது. ஆம், இது உங்கள் கேசத்தை ஷாம்பூ செய்வதுபோல் சுலபமானது.

**3** கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டையின் தரத்தைப் பற்றி நீங்கள் உறுதிப்படுத்திக்கொள்ள முடியும். காரணம், இது உங்கள் கேசத்தை பாதுகாக்கும். வண்ணம் விசேடமாகத் தயாரிக்கப்பட்டது. முழுமையான பாதுகாப்பு— இதுவே, கோத்ரெஜின் உறுதியளிப்பு.

**கோத்ரெஜ்®** வழங்கும் தானே-பரவும் பெர்மனென்ட் ஹேர் டை.

CLARION/B/GS/50/173 TML





# ஒவ்வொரு நாளும் எல்.ஐ.சி. 3 கோடி ரூபாய் உரிமைத் தொகையினை 5000 பாலிசிதாரர்களுக்கு வழங்குகிறது.

இதோ சான்று. கடந்த ஆண்டு எமது 1353 கிளை அலுவலகங்கள் 1000 கோடி ரூபாய் உரிமைத் தொகையினை 16 லட்சம் பாலிசிதாரர்களுக்கு வழங்கின.

அதாவது ஒவ்வொரு நாளும் 5000 பேருக்கு மொத்தம் 3 கோடி ரூபாய் உரிமைத் தொகை வழங்கப்பட்டது.

கிட்டத்தட்ட 60 சதவிகிதம் பாலிசிகளில், உரிமைத் தொகை செலுத்தப்பட வேண்டிய தேதியன்றோ அதற்கு முன்போ வழங்கப்பட்டது.

மேலும், 1986 ஆம் ஆண்டு மார்ச் 31 ஆம் தேதி வரை, ஐந்து சதவிகிதத்திற்குக் குறைவான பாலிசிகளில் மட்டுமே உரிமைத் தொகை வழங்கப் படாமல் இருந்தன.

இது உலகில் உள்ள முன்னேற்றமடைந்த நாடுகளின் ஆயுள் காப்பீட்டுக் கழகங்களின் சாதனைக்கு ஒப்பாகும்.

ஏன், இதற்கும் மேலான முன்னேற்றம் காணலாம், நீங்கள் இவற்றை செய்தால்:

- **உங்கள் விலாசம் மாற்றத்தை எங்களுக்கு உடனே தெரிவியுங்கள்.**
- **உங்களுடைய பாலிசி ''சம்பள பிடித்தம்'' முறையின் கீழ் இருந்தால், உங்களுடைய ஊர், நிறுவனம் போன்றவற்றில் மாற்றம் ஏற்படும்போது, உடனே எங்களுக்கு தெரிவியுங்கள்.**



**நினைவிருக்கட்டும்!**
**நீங்கள் தக்க சமயத்தில் செயல்பட்டால், நாங்கள் பாலிசியின் உரிமைத் தொகையினை உங்களுக்கு விரைவாக வழங்குவதற்கு ஏதுவாக இருக்கும்.**

மேலும் விவரங்களுக்கும், உதவிக்கும் உங்களுடைய முகவரையோ அல்லது அருகாமையிலுள்ள எல்.ஐ.சி. அலுவலகத்தையோ அணுகவும்.



## லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா



R K SWAMY LIC 8882 A TAM



ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VI

ராஜ்மோகன் காந்தி

6

# நேருவுடன் ஒரு பனிப்போர்!



வி. பி. மேனன் — ...பற்றிய ஆலோசனை



கருத்து மாறுபட்ட நண்பர்கள்.

**தே**தி: ஜூன் 4, 1959.

அகில இந்திய விவசாயிகள் சம்மேளனத்தின் கூட்டம் ஒன்று அன்று மாலை சென்னையில் நடக்கவிருந்தது. அதில் பேசுவதற்காக மசானி வந்திருந்தார். அன்று பிற்பகலில் மோனிகா ஃபெல்டன் ராஜாஜியைக் காணச் சென்றார். அங்கு ஏகப்பட்ட பேர் ஸி. ஆரைக் காணக் காத்து நிற்பதைப் பார்த்து வியப்படைந்தார். ''இங்கே ஒரே பரபரப்பு!'' என்று ஸி. ஆர். நரசிம்மன் சொன்னார். ''எல்லாரும் ரொம்ப மர்மமான முறையில் நடந்து கொள்கிறார்கள்!''

ஸி. ஆரைக் காணத் தமது முறை வரும் வரை காத்திருந்த மோனிகா, கடைசியில் அந்தச் சந்தர்ப்பம் கிடைத்த போது, ''இன்று நீங்கள் பலருடனும் நிறையப் பேசிக் களைத்துப் போயிருப்பீர்கள்; நான் இன்னொரு நாள் வருகிறேன்'' என்றார். ராஜாஜியோ, ''நான் இன்னும் கொஞ்சம் பேசுவதற்காக மேலும் சிலரைப் பார்க்கப் போய்க் கொண்டிருக்கிறேன்! நீங்கள் விரும்பினால் என்னுடன் காரில் வந்து வழியில் உங்கள் வீட்டில் இறங்கிக் கொள்ளலாம்'' என்றார்.

காரிலே போகும் போது, ''நான் இன்று இரவு இன்னொரு சொற்பொழிவாற்றுகிறேன்'' என்றார் ஸி. ஆர்.

''பத்திரிகைகளில் அறிவிப்பு எதையும் காணோமே?'' என்று மோனிகா கேட்டார்.

''பத்திரிகைகளுக்குத் தெரிவிக்கவில்லை. பிரதான பேச்சாளர் மசானிதான். ஆனால் நானும் மேடையில் தோன்ற வேண்டும்; ஏதேனும் சொல்ல வேண்டும் என்று அவர் வற்புறுத்துகிறார்.''

''நானும் வரட்டுமா?''

''உங்களுக்கு விருப்பமானால் வரலாம்'' என்றார் ராஜாஜி. ''பொதுக் கூட்டம் நடப்பது விவேகானந்தா கல்லூரியில், உங்கள் வீட்டின் அருகில்தான்.''

**அ**வருடைய பேச்சு அல்லது தோரணை, அன்றைய தினம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்று எண்ணுவதற்குச் சற்றும் இடம் தரவில்லை என்று நினைவு கூர்கிறார் மோனிகா ஃபெல்டன். அவரை அவரது வீட்டில் இறக்கி விட்டு விட்டு ஸி. ஆர். உட்லண்ட்ஸ் ஹோட்டலுக்குப் போனார். அங்கு மசானியிடமும் அகில இந்திய விவசாயிகள் சம்மேளனத்தின் ஆந்திரா தலைவரான என். ஜி. ரங்காவிடமும் ஆலோசனைகள் நடத்தினார். காங்கிரஸின் புதிய நிலச் சீர்திருத்தக் கொள்கை காரணமாக அக் கட்சியின் நாடாளுமன்றக் காரியதரிசி பதவியை ரங்கா சமீபத்தில்தான் துறந்திருந்தார். வல்லபபாய் பட்டேலின் வலது கரமாக விளங்கிய வி. பி. மேனன் அங்கிருந்தார். மேலும் சில புள்ளிகளும் ஆலோசனைகளில் கலந்து கொண்டனர். இந்தக் கூட்டத்தில் புதியதொரு கட்சிக்கு இருபத்தோரு அடிப்படைக் கொள்கைகள் வகுக்கப்பட்டன. அவற்றுள் முக்கியமானவை, இந்தியர்கள் அனைவருக்கும் சம வாய்ப்பு, அரசுக்குக் குறைந்தபட்ச அதிகாரங்



''இன்று என்ன அதிசயம்? ஊழியர்களெல்லோரும் விழிப்புடன் வேலை செய்றாங்க? இன்ஸ்பெக்ஷனோ?''

''ஊஹூம்... ஏதோ ஒரு படத்துக்காக ஆபீஸ் காட்சி ஷூட்டிங் எடுக்கப் போறாங்களாம்.''

— சுதர்ஸன்

கள், சிக்கனத்தைக் கடைப்பிடிப்பது, தனி நபர் சுதந்திரத்துக்கும் சாதனைகளுக்கும் ஊக்கமளித்துத் தர்மகர்த்தா பண்பை வளர்ப்பது முதலியன. கொள்கைகளைத் தெளிவாக வகுத்த போதிலும் கட்சிக்கு என்ன பெயர் வைப்பது என்று யாருக்கும் தெரியவில்லை. Conservative என்ற தொனி பெயரில் இருக்க வேண்டும் என்று ராஜாஜி நினைத்தார். 'விவசாயிகள் கட்சி என்று அழைக்கலாம்' என்றார் ரங்கா. மசானியோ, 'Liberal என்ற அர்த்தம் வருமாறு இருக்க வேண்டும் அல்லது 'ஜனநாயகக் கட்சி' என்று பெயர் சூட்டலாம்' என்றார். கடைசியில், 'இப்போதைக்குப் பெயர்ப் பிரச்னை வேண்டாம். ஒத்திப் போடலாம்' என்று தீர்மானித்தனர்.

ஜெயப்பிரகாஷ் அன்று சென்னையில் இருந்தார். ராஜாஜி மீண்டும் ஒருமுறை அவரைப் புதிய கட்சியில் சேரவும் அதன் தலைமையை ஏற்கவும் கோரினார். ஆனால் ஜெயப்பிரகாஷ் மறுபடி மறுதளித்ததுடன் கட்சிக்குத் தமது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்தார்.

அன்று மாலை விவேகானந்தா கல்லூரியில் மசானி பேசுவதைக் கேட்கக் குழுமியவர்கள், ராஜாஜியும் ஜெயப்பிரகாஷூம் மேடையில் வீற்றிருக்கக் கண்டு அதிசயித்தனர். ராஜாஜி கூறிய சொற்கள் அதை விடப் பெரிய ஆச்சர்யத்தை அளித்தன. ''இன்று காலை ஒரு புதிய கட்சி உருவாயிற்று'' என்றார் ஸி. ஆர். அரங்கில் குழுமியிருந்தோர் பிரமித்துப் போனார்கள். ஒரு கணம்தான். அடுத்த கணம் பலத்த கரவொலி எழுப்பி அறிவிப்பை வரவேற்றார்கள். ''புதிய கட்சியின் பெயர்...'' என்று கூறிச் சற்று நிறுத்தினார் ஸி. ஆர். இப்போது மசானி, ரங்கா, மேனன் முதலியோர் ஆச்சர்யத்தில் ஆழ்ந்து போனார்கள்! ''சுதந்திரக் கட்சி'' என்று அறிவித்தார் ஸி. ஆர். கூட்டத்துக்குக் காரில் வரும் போது அவருக்குப் பெயர் உதயமாகிவிட்டிருந்தது. கூட்டத்தினர் இம்முறை வினாடி கூடத் தாமதியாமல் பலமாகக் கைதட்டினார்கள்.

''அப்போது ராஜாஜியின் முகத்தில் இருந்த பிரகாசத்தை அதற்கு முன் எப்போதுமே நான் கண்டதில்லை'' என்று மோனிகா ஃபெல்டன் எழுதியிருக்கிறார்.

சில வாரங்கள் கழித்து மோனிகா ராஜாஜியைச் சந்தித்த போது ''என்னைப் பற்றிய உங்கள் புத்தகத்தை நீங்கள் எழுதி முடிக்கவே போவதில்லை'' என்றார் ஸி. ஆர். ''எப்படி முடியும்? நீங்கள்தான் ஒவ்வொரு நாளும் உங்கள் வாழ்க்கையின் ஒரு புதிய அத்தியாயத்தை ஆரம்பித்துக் கொண்டேயிருக்கிறீர்களே!'' என்றார் மோனிகா.

ராஜாஜி சிரித்தார்.

''உங்களுடைய இந்தப் புதிய முயற்சியில் உங்களால் வெற்றி பெற முடியும் என்று நினைக்கிறீர்களா?'' என்று கேட்டார் மோனிகா.

''நான் நூறு வயது வாழ்வதில் வெற்றி பெற்றால் இதிலும் வெற்றி பெற்று விடுவேன்'' என்றார் ஸி. ஆர்.

புதிய கட்சியின் தலைவராக என். ஜி. ரங்கா பொறுப்பேற்றார். மசானி பொதுக் காரியதரிசியானார். ஏற்கெனவே தாம் கூறி வந்த சமாதானங்களை ஒதுக்கி விட்டுக் கட்சியை வழிநடத்திச் செல்லும் பொறுப்பை ஸி. ஆர். ஏற்றார். நேருவுடன் அவருக்கு அவ்வப்போது ஏற்பட்டு வந்த மோதல்கள் இப்போது தனி நபர் போராட்டமாக இன்றிக் கட்சி வடிவம் பெற்று விட்டன!

ஸி. ஆர். தம்மைக் கருணையின்றி, — தயை தாட்சண்யமின்றி — தாக்குவதாக முன்பு நேரு குறிப்பிட்ட போது, ஸி. ஆர்., நாங்கள் நெருங்கிய நண்பர்களே; ஒருவரிடம் ஒருவர் அன்பு கொண்டவர்களே என்று பதிலுக்குக் கூறியிருந்தார். ஓராண்டுக்கு முன்னதாகப் பின்வருமாறு எழுதியும் இருந்தார்:

ராஜாஜியும் நேருவும் சண்டை போடலாமா? கூடாதே!' என்று பலர் சலைப்படுகிறார்கள். ஆம், நான் கருத்து மாறுபட்டுப் பேசியிருக்கிறேன்; தெளிவு கருதிக் கடுமையான சொற்களையும் பேசியிருக்கிறேன். ஆனால் நண்பர்கள் ஒருவரிடமிருந்து ஒருவர் கருத்து மாறுபட்டிருந்த போதிலும் ஒருவருக்கொருவர் அன்பு செலுத்த முடியாதா என்ன? எங்கள் இதயங்களில் துவேஷம் இல்லை.''

நேருவும் இதே போல் தமக்கு ராஜாஜியிடம் அன்பும் மரியாதையும் உண்டு என்றே கூறி வந்தார். அவ்வாறாயின் இருவரும் சந்தித்து ஏன் கருத்து வேறுபாடுகளை அலசியிருக்கக் கூடாது? இந்தப் பனிப்போர் ஏன், எதற்காக நீடிக்க வேண்டும்? நேருஜிக்கு ராஜாஜி எழுதிய கடிதம் ஒன்று இதற்கு விடை அளிக்கிறது!

(தொடரும்)

# நன்றி!



ஆலங்குடி மில் அதிபர் திரு. K. ராஜமாணிக்கம் R. தன பாக்கியம் தம்பதியரின் 60வது மணிவிழா 4.2.89 அன்று திருமலை திருப்பதியில் குடும்பத்தினர், உறவினர், நண்பர்கள் அனைவரும் வாழ்த்த மிகச் சிறப்பாக நடந்தது.

மணிவிழாவிற்கு நேரில் வந்து வாழ்த்தியவர்களுக்கும், தபாலில் வாழ்த்து அனுப்பியவர்களுக்கும், நன்றி.

உறவினர்கள்

பவானி ஆயில்மில்ஸ், ஆலங்குடி-622 301 புதுகை மாவட்டம்



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி.

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542 – இல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 90 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ. 250/- அல்லது 300/- அல்லது 500/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 2500/- அல்லது 3000/- அல்லது 5000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்பவேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**

**D – 76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**

**கும்பகோணம் – 612 001.**

****இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு****



* பாண்டியனின் நினைப்பு.

# தமிழ்க்குடிமகனைப் பற்றிப் பாண்டியன் என்ன நினைப்பார்?



* மாலைக்குப் பதில் நோட்டு.



* மனிதகுல சிந்தனை.



* அமெரிக்காவின் பாதிப்

* ஜவாஹர், கோவில்பட்டி.

? ராஜீவ் காந்தி பற்றி யார் என்ன சொன்னாலும் அது உண்மையா இல்லையா என்று ஆராயாமல் வெளியிட்ட இந்திய முன்னணி பத்திரிகைகள், ராமகிருஷ்ண ஹெக்டே பற்றி சுப்பிரமணிய சுவாமி கூறும் குற்றச் சாட்டுக்களைப் பிரசுரிக்காமல், அதற்கு எதிராக ஹெக்டே கூறும் செய்திகளை மட்டுமே வெளியிடுகின்றன. இது தான் பத்திரிகை தர்மமா?

! நீங்கள் கொண்டிருக்கும் கருத்து முற்றிலும் தவறானது என்பதற்குச் சாட்சியம் இது தான்: சுப்பிரமணிய சுவாமி மீது மட்டுமின்றி, அவரது கூற்றுக்கள் உண்மையா இல்லையா என்று கண்டறிய முயற்சி மேற்கொள்ளாமல் பிரசுரித்த பத்திரிகைகள் மீதும் மானநஷ்ட வழக்குத் தொடர ஹெக்டே தீர்மானித்திருப்பதுதான்!

* ராமு, சென்னை.

? ஆட்டோ சங்கர் விவகாரம் என்னாச்சு?

! புதிய அரசின் அணுகுமுறை பற்றி நாம் அளந்தறிய அந்த வழக்கு உதவப் போகிறது!

* என். ஆர். சுப்பிரமணியன், பூனாம்பாளையம்.

? தமிழ்க் குடிமகனைப் பார்க்கும் போது பாண்டியன் என்ன நினைப்பார்?

! ஹூம்ம்ம்... வானளாவிய அதிகாரமெல்லாம் குடிமகனிடம் போய் விட்டதே என்றுதான்!

* பி. ராமகிருஷ்ணன், மேலகிருஷ்ணன் புதூர்.

? வேலை இல்லாமல் இருக்கும் படித்த இளைஞர்களுக்குக் கண்டிப்பாக வேலை கிடைக்கும் என்று முதல்வர் உறுதி அளித்துள்ளாரே?

! வேலை கிடைக்கிறதோ இல்லையோ, உறுதிமொழி கிடைத்து விட்டது, இப்போதைக்கு. தவிர, வேலை தருவதாகத் தேர்தல் வாக்குறுதி அளித்து விட்டதால் அவசரப்பட்டு அரசு ஊழியர் பட்டாளத்தை அதிகரித்து விடக் கூடாது. தொழில் தொடங்க ஊக்கம் அளித்து வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதே தமிழகத்துக்கு நல்லது.

* ஆற்காடு எழிலன், திருச்சி.

? 'தமிழகத்தில் பெண்ணரசி ஆட்சி' என்று ஒரு சாமியாரிடம் பேட்டி கண்டு வெளியிட்டீரே, நினைவிருக்கிறதா?

! ஓ, நினைவிருக்கிறதே! சாமியார் ராஜயோகி அதிர்ஷ்டக்காரர்தான். அவர் வாக்கு பொய்த்துப் போகாமல் ஜானகி ஆட்சி சில நாட்களேனும் நடந்து விட்டதல்லவா! 'ஆட்சின்னு வர்றப்போ வீரப்பனும் ஜெயலலிதாவும் இணைஞ்சு செயலாற்றுவாங்க' என்றும் கூறினார். யார் கண்டது, எதிர்காலத்தில் அதுவும் உண்மையாகிக் கஷ்டப்படுத்தப் போகிறதோ என்னவோ!

* முருகேசன், தேனி.

? காந்திஜியின் சீடர்களில் ஒருவரான மாலதி தேவி, ராஜீவ் காந்தியின் கையால்

விருதைப் பெற மாட்டேன் என்று கூறியது சரியா?

! 'எனக்கு விருது வழங்க முன்வந்ததற்கு நன்றி. ஆனால் விருதை எதிர்பார்த்து நான் தொண்டாற்றவில்லை; அதனால் தயவு செய்து எனக்கு விருது வழங்க வேண்டாம்' என்று கூறியிருந்தால் பாராட்டலாம். 'ராஜீவ், காந்திய மார்க்கத்தில் நடக்க வில்லை; ஆனாலும் இது ஜம்னாலால் பஜாஜ் நினைவாக காந்தியப் பணிகளுக்கு அளிக்கப்படும் விருது ஆனதால் அடக்கத் துடன் பெற்றுக் கொள்கிறேன்' என்று கூறி யிருந்தாலும் வாழ்த்தலாம். இப்போது மாலதி தேவி, 'விருது வேண்டும்; ஆனால் ராஜீவ் கரங்களிலிருந்து அதைப் பெற்றுக் கொள்ள மாட்டேன்' என்று கூறியதன் மூலம், இவரை உயர்வாக மதித்து விருது வழங்க முன்வந்த ஓர் அமைப்பை அவமதித்து, அதன் நிர்வாகிகள் உள்ளத் தைப் புண்படுத்தி விட்டார். இது காந்தியம் அல்ல. விருது வழங்குவது அரசோ அல்லது ராஜீவோ அல்ல என்பதையும், அமைப் பாளர்கள் ராஜீவை அழைத்தது, நாட்டின் பிரதமர் என்ற முறையில்தான், ராஜீவ் என்பதற்காக அல்ல என்பதையும் மறக்க லாகாது.

* வி. சர்மா, புதுதில்லி.

? சிதார் மேதை ரவிசங்கர் அறுபத் தொன்பது வயதில் திருமணம் செய்து கொண்டது பற்றி...?

! திருமணத்துக்குப் பின் சேர்ந்து வாழ்வது இங்கு. சேர்ந்து வாழ்ந்த பின் திருமணம் என்பது அமெரிக்காவில் சகஜம். ரவி சங்கர் பல காலம் அமெரிக்காவில் வாழ்ந்தவர். பாதிப்பு இல்லாமலா போகும்!

* க. சரவண குமார், தூத்துக்குடி. *

? ஜானகி அணியிலுள்ள தொண்டர் களின் தற்போதைய நிலை...?

! மெய்யான தொண்டர்கள் எந்தக் கட்சி யில் இருந்தாலும் தொண்டர்களே... குட்டித் தலைவர்கள் விஷயம்தான் சிக்கல் மிகுந்தது. கருணாநிதிக்கு இவர்கள் மாலை அணிவிப் பதும் ஒத்துழைப்பதாகக் கூறுவதும் அரு வருப்பானது. தி. மு. க.வில் சேர முன் வருகிறவர்கள் பற்றிப் பேசி, முடிவெடுக்கக் கூடும் தி. மு. க. செயற்குழு, எச்சரிக்கையு டன் செயல்பட வேண்டும். வேறு கட்சி களுக்குப் போய் விடப் போகிறார்களே என்ற கவலையில் இங்கே வாசல் கதவை அகலத் திறந்து வைத்தால் ஆபத்து! 'கூடா ரத்துக்குள் தலையை மட்டும் நுழைத்துக் கொள்கிறேன்' என்று கேட்டு அனுமதி பெற்ற ஒட்டகம் பின்னர் என்ன செய்தது என்ற கதை நமக்குத் தெரியும். மேலும், நேற்று வரை லஞ்சப் பேர்வழிகள் என்று கலைஞரால் முத்திரை குத்தப்பட்டவர்கள்

* பத்திரிகைகள் மீதும் வழக்கு.



**நீங்கள் கேட்டவை**

**— தராசு**

இன்று தி. மு. க.வில் சேர அனுமதிக்கப் படுவார்களானால் ஊழலற்ற ஆட்சி தரு வதாக தி. மு. க. அளித்த தேர்தல் வாக்குறுதி என்ன ஆவது?

* ஆர். முரளி, ஹோசூர்.

? 'பிராமணன் தன்னை பிராமணன் என்று நினைத்துக் கொள்வதே மனிதகுலத் துக்குச் செய்யும் துரோகம்' என்று வீரமணி கூறுகிறாரே?

! திராவிடன் தன்னைத் திராவிடன் என்று எண்ணுவதும் அப்படித்தான்!

* கே. ஆர். தேவேந்திரன், வேலூர்.

? 'ஈஸிசேரில் படுத்துக் கொண்டு படிப் பவர்கள் படிக்கும் பத்திரிகை கல்கி' என்று ஜெயலலிதா பத்திரிகை எழுதுகிறதே?

! ஜெயலலிதாவுக்கு ஜால்ரா போட்டால் தான் இளமை துள்ளும் பத்திரிகையாக விளங்க முடியும் எனில் அத்தகைய இளமை இந்தப் பத்திரிகைக்கு வேண்டவே வேண் டாம்.

* ரகுராமன், சென்னை.

? பஞ்சாயத்து யூனியன் தலைவர்கள் மாநாட்டில் கலைஞருக்கு மாலைகளுக்குப் பதில் ரூபாய் நோட்டுக்களைச் சுமார் பதி னைந்து நிமிஷங்களுக்குத் தந்து கொண் டிருந்தார்களாமே?

! அவற்றை அவர் பாக்கெட்டில் போட் டுக் கொண்டு விடப் போவதில்லை; நல்ல தற்குத்தான் பயன்படுத்துவார் என்று நம்ப இடமிருந்தாலும் இந்தச் சம்பவம் ஒரு நல்ல முன்னுதாரணம் இல்லை. தொடக்கத்தி லேயே தடுக்கப்பட்டிருக்க வேண்டும்.

*** ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**க. சரவண குமார்,**
**149/A காளியப்பன் தெரு,**
**தூத்துக்குடி — 1.**

# குமரி மாவட்டம் கொண்டாடும் மாசி மாதத் திருவிழா!



மண்டைக்காடு பகவதி அம்மன் திருக்கோயில்.

ஏழு ஆண்டுகளுக்கு முன் நடந்த ஒரு துப்பாக்கிச் சூடு காரணமாகக் குமரி மாவட்டத்தைச் சேர்ந்த மண்டைக்காடு மிகவும் பிரசித்தி பெற்றது! அங்குள்ள பகவதி அம்மன் திருக்கோயில் பற்றியும் மாசி மாதம் நடக்கும் பத்து நாள் திருவிழா பற்றியும் பாரத நாடு எங்கும் தெரிய வந்தது!

உண்மையில் 'மண்டைக்காடு' என்பதே அதன் பெயர் அல்ல; 'மந்தைக் காடு' என்பதுதான் 'மண்டைக்காடு' என மருவியது என்று சொல்வார்கள். பல நூற்றாண்டுகளுக்கு முன் புல்பூண்டுகளும் செடி, கொடி, மரங்களும் நிறைந்து அப் பகுதி ஒரு காடாக இருந்ததாம். சிறுவர்கள் ஆட்டு மந்தைகளை ஓட்டி வந்து மேய்ப்பார்களாம்.

இத்தகைய மந்தைக் காட்டுக்கு அந்நாளில், கேரள மாநிலத்திலுள்ள கொல்லம் என்ற இடத்தைச் சேர்ந்த முனிபுங்கவர் என்

பவர் வந்து, யோக சித்தியில் அமர்ந்து, பல சித்திகளைச் செய்து வந்தார். ஒரு தடவை அவர், ஓர் ஆழமான குழி தோண்டி, அதன் உள்ளே இருந்தார். அவரைத் தரிசிக்க வந்தவர்களிடம், மண்ணினால் தம்மை மூடி விடும்படி கூறினார். அதன்படி அவர்கள் செய்ய மறுநாள் அந்த இடத்தில் புற்று ஒன்று வளர்ந்திருந்தது.

ஆட்டு மந்தைகளை மேய்க்க வந்த சிறுவர்கள் புற்றினைக் கண்டு தங்கள் கையிலிருந்த தடியால் அதனை விளையாட்டாக அடிக்க... புற்றிலிருந்து இரத்தம் பீறிட்டுப் பாய்ந்தது. சிறுவர்கள் பயந்து போய்... ஊருக்குள் ஓடிச் சென்று, பலரிடமும் சொன்னார்கள்.

அங்கிருந்து நான்கு மைல் தொலைவிலுள்ள கொன்னங்கோடு என்ற இடத்தில் இருந்த நாயர் சமூகத்திற்கு அவ்விடம் சொந்தமாக இருந்தது. பூமியின் சொந்தக்காரர் உண்மை அறிய ஜோதிடரிடம் முறையிட்டார். ஜோதிடர், அங்கு தேவியின் அருள் குடிகொண்டிருப்பதாகக் கூறினார். உடனே மக்கள் அப் பகுதியிலுள்ள காடுகளை அழித்து... அங்கு கோயில் எழுப்பி, வழிபடத் தொடங்கினர். இதுவே மண்டைக்காடு பகவதி அம்மன் திருக்கோயில் எழுந்த வரலாறு.

முன்னாளில் தேவியின் அருள் வேண்டி... ஆடு, கோழி முதலியவற்றைப் பலியிட்டனர். சேது லட்சுமி பாய் மகாராணி ஆட்சிக் காலத்தில் பலியிடுவது நிறுத்தப்பட்டது.

பல்லாயிரக்கணக்கான மக்கள் பகவதியாக எண்ணி, வணங்கி வரும் புற்று, தற்போது 16 அடி உயரம் வரை வளர்ந்திருக்கின்றது; இன்னும் வளர்ந்து கொண்டிருக்கின்றது என்கின்றனர்.

**ம**ண்டைக்காடு பகவதி அம்மன் திருக்கோவில், கன்னியாகுமரி மாவட்டத்தில் குளச்சலுக்கும் மண்வளமிக்க மணவாளக்குறிச்சிக்கும் இடையே கடற்கரையோரமாக அமைந்துள்ளது. கோயிலைச் சுற்றிலும் தென்னையும் புன்னையும் கமுகும், மாவும் பலாவும் வளர்ந்து பசுமை கொழிக்கிறது. பக்தர்கள் நீராடுவதற்குக் கால்வாயும் உள்ளது.

அரபிக் கடலின் அலைக்கரம் தாலாட்ட, காற்றில் அசையும் தென்னங் கீற்று இசை பாட, தேவியின் பக்தர்கள் கோவிலை வலம் வருகின்றனர். மாசி மாதம் நடைபெறும் பெருவிழாவுக்குக் கேரள மாநிலத்திலிருந்து ஆயிரக்கணக்கான மக்கள் 41 நாட்கள் விரதமிருந்து, மாலை தரித்து, இருவினை தீர இருமுடி கட்டிக் கைகளில் பல வண்ணக் கொடிகளை ஏந்தி, "தேவியே சரணம் தா! பகவதியே!" என்று முழங்கிய வண்ணம் வருகின்றனர்.

அந் நாளில், கன்னியாகுமரி மாவட்டம், கேரளாவோடு இணைந்திருந்ததால்... இக் கோயிலின் வடிவமைப்பு கேரளக் கட்டடக் கலையின் வடிவிலேயே உள்ளது. இப் புற்றின் முன்புறம் மகிஷாசுரமர்த்தினியாக நிற்கும் பகவதியின் முழு உருவம் வெள்ளியினால் செய்து வைக்கப்பட்டுள்ளது. தேவி, வடக்கு நோக்கி அருள் பார்வை செலுத்திய வண்ணமிருக்கிறாள்.

அம்மை நோய், காலரா, தலையில் வரும் பொடுகு, கட்டிகள் பல்வேறு நோய் நொடிகள் தீர, பக்தர்கள் தேவியை வழிபடுகின்றனர். உப்பு, மிளகு, மரப் பொம்மை, தொட்டில், வெள்ளியினால் செய்த உடல் உறுப்புகள் (கை, கால், தலை, ஆள் உருவம்) ஆகியவற்றை பக்தர்கள் நேர்த்திக் கடனாகச் செலுத்துகின்றனர். அம்மை நோய் நீங்கப் பெற்றவர்கள் 'மண்டை அப்பம்', அல்லது 'மண்டைப் புற்று' அவித்துப் படைக்கின்றனர். இத்தகைய வழிபாட்டை வேறெங்கும் பார்க்க முடியாது. பக்தர்கள், இக் கோயில் அருகேயுள்ள கடலில் நீராடி, திருநீறணிந்து, இரு கரங்களையும் குவித்து, ஈரத் துணியுடன் தரையில் உருண்டு உருண்டு தேவியை வணங்குவது காண்போர் உள்ளத்தை உருகச் செய்து விடும்!

ஒவ்வொரு ஆண்டும் மாசித் திங்கள் கடைசி செவ்வாய்க் கிழமையை அடிப்படையாகக் கொண்டு இங்கு திருவிழா பத்து நாட்கள் நடைபெறும். ஏழாவது நாள் விழாவை 'வலியப் படுக்கை' என்றும் கடைசி நாள் விழாவை 'ஒடுக்கு எடுப்பு' என்றும் கூறுவர். விழாவை முன்னிட்டு, ஹைந்தவ இந்து சேவா சங்கம், 'இந்து சமய மாநாடு' நடத்துகின்றது. கடந்த 51 ஆண்டுகளாக இம் மாநாடு இங்கு நடைபெற்று வருகின்றது.

மண்டைக்காடு பகவதி அம்மன் திருவிழாக் காலத்தில் குமரி மாவட்டமே திருவிழாக் கோலம் பூண்டு காணப்படும். இத் திருவிழாவில் ஜாதி, மத வேறுபாடின்றி எல்லாச் சமயத்தினரும் கலந்து கொள்கின்றனர். இவ்வாண்டு திருவிழா பிப்ரவரி 26-ந் தேதி கொடியேற்றத்துடன் ஆரம்பமாகிறது. ஏழாண்டுகளுக்கு முன்பு நடந்த துப்பாக்கிச் சூடு மாதிரி மீண்டும் ஒரு அசம்பாவிதம் நடந்து விடக் கூடாது என மக்கள் உணர்ந்து கவனமாக இருந்து வருகின்றனர்.

கட்டுரை, புகைப்படம்: **பானு மணாளன்**

# கிராமக் கலைகளைப் போற்றும் ஒரு கல்லூரி

அந்த நிறுவனத்தின் நிர்வாக அதிகாரிக்குக் கர்நாடக சங்கீதம் தெரியும். பொழுதுபோக்காக பெயிண்டிங் வேலை தெரியும் என்றெல்லாம் சொன்னால் பாராட்டுவார்கள். ஆனால், அந்த அதிகாரி பொழுதுபோக்காகக் கரகம், ஒயிலாட்டம் என்று தேர்ச்சி பெற்றிருக்கிறார் என்று சொல்லிப் பாருங்கள். எத்தனை பேர் மகிழ்ந்து பாராட்டுவார்கள்?

இந்த மனப்பான்மையை மாற்ற மதுரை அமெரிக்கன் கல்லூரியில் ஓர் ஆரம்பம் ஏற்பட்டிருக்கிறது. ஒயிலாட்டம், கரகம், காவடியாட்டம், புரவி நடனம் — என்று நாட்டுப்புறக் கலைகளில் மாணவர்கள் பயிற்சி பெறுகிறார்கள! பாடத் திட்டத்துக்கு அப்பாற்பட்ட நிலையில், வாரம் இரண்டு நாட்கள் மாலை ஐந்து மணிக்கு மேல் இந்த வகுப்புக்கள் நடைபெறுகின்றன. நாட்டுப்புறக் கலை அறிஞர் ஓம். பெரியசாமி, இந்தக் கல்லூரிக்கு வந்து ஓர் ஆண்டுக் காலம் இந்தக் கலைகளில் பயிற்சியளித்திருக்கிறார்.

அவரிடம் இதே கல்லூரியில் பயிற்சி பெற்ற ரவி என்பவர் தமிழில் எம்.ஏ. முடித்துவிட்டு, எம்.ஃபில். ஆராய்ச்சி செய்து

* மாணவர்களின் காக ஆட்டம்.





* தம்முடைய ஆட்டக்காரர்களை அழைத்து வந்து ஆடிக் காட்டுகிறார் அழகேந்திரன்.

• கரக ஆட்ட மாணவர்களுடன் கல்லூரி முதல்வர்.



கொண்டிருக்கிறார். இவர்தான் இப்போது அமெரிக்கன் கல்லூரியில் கரகம் ஆசிரியர்.

ஒயிலாட்டம் என்பது 'ஸ்டெப்ஸ்' என்னும் நடைவேகத்தோடு கையில் ஒரு துண்டுத் துணியுடன் இசைக்கேற்ப ஆடுகிற ஆட்டம். மதுரை மாவட்டம் அழகர் கோவில், வலையப்பட்டி, பொய்கைக்கரை பட்டி, சிவகங்கை அருகேயுள்ள ராஜாக்கூர் போன்ற பகுதிகளில் சிறப்பாக விளங்கு கின்ற நாட்டுப்புறக் கலை இது. இதைப் பற்றி ஆய்வேடு தயாரிப்பதற்காக, தமிழ்த் துறையைச் சேர்ந்த சாமுவேல் சுதாநந்தா என்பவர் பணியாற்றிய போது, அழகர் கோவிலில் காவலராகப் பணியாற்றும் அழகேந்திரன் என்பவரை அணுகியிருக் கிறார். இந்தத் தொடர்பில் பிறந்தது ஒயிலாட்டம் பயிற்சி வகுப்பு. அழகேந்திரன் தான் அமெரிக்கன் கல்லூரியில் இன்று ஒயிலாட்டம் கற்றுத் தரும் ஆசிரியர்.

''சாதாரணமாக ஒயிலாட்டத்தில் நான்கு நடைகள் சொல்வார்கள். இதை அடிப்படை யாக வைத்து நாற்பத்தெட்டு நடைகளை உருவாக்கியிருக்கிறேன்'' என்கிறார் அழகேந்திரன்.

நாட்டுப்புறக் கலைகள் பயிற்சிக்கான பொறுப்பு வகிப்பவர் தமிழ்ப் பேராசிரியர் கே. இளங்கோவன். ''ஒயில்' என்றால் ஒசை. அதற்கேற்ப உடல் அசைவு' என்று பொருள் சொல்கிறார் இளங்கோவன்.

''கல்லூரி மாணவர்கள், தாங்கள் கற்கும் கலையைக் கிராமங்களுக்கே சென்று ஆடிக் காட்டுவது உண்டு. அப்போதெல்லாம் அந்தக் கிராமப்புற மக்கள் அடைகிற மகிழ்ச் சியை அளவிட முடியாது'' என்கிறார் கல்லூரி முதல்வர் பீட்டர் ஜெயபாண்டியன்.

கிராமப்புற நாகரீகத்தின் பெரும்பான் மையான கூறுகளை நமது இளைஞர்கள் கற்றுக் கொள்ள வேண்டும். கல்லூரிப் படிப்பு என்று வந்து விட்டால் நகர்ப்புற நாகரிகம்தான் என்கிற உணர்வை மாற்ற வேண்டும். இதற்குத்தான் நாங்கள் பாடு படுகிறோம்'' என்றும் குறிப்பிடுகிறார் முதல்வர்.

• மாணவர்களுக்கு ஒயிலாட்டப் பயிற்சி.

இந்தக் கல்லூரியில் இன்னும் ஒரு சுவையான அம்சம் 'ஸையன்ஸ் ஜாதா' என்பது. அண்மையில் மதுரை அவனியா புரத்திலிருந்து வற்றாயிருப்புவரை எழுபது கிலோ மீட்டர் தூரம், இக் கல்லூரி மாண வர்கள் நடந்தே சென்று நாட்டுப்புற மக் களைச் சந்தித்துக் கலை நிகழ்ச்சிகள் வாயிலாக, சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பு, மரங்களை அழியாமல் பாதுகாப்பது, பூச்சி மருந்துகளையும், பயிர் உர வகைகளையும் சரியாகப் பயன்படுத்தும் முறைகள் — என்று விளக்கியிருக்கிறார்கள். இந்த ஜாதாவில், 'தெரு நாடகம்' ஒரு கவர்ச்சிகரமான அம்ச மாக விளங்கியதாம்.

கட்டுரை; படங்கள்: 'யெஸ்பால்'

# அதற்கு எட்டுக் கோடி; இதற்கு இரண்டு கோடி!



**ப**ம்பாயில் அப்நா உத்சவ் — பதினெட்டு நாள் உத்சவம் ஜப்பான் மன்னர் ஹிரோஷிடோவின் மரணத்தின் காரணமாய்ப் பதினைந்து நாளாய்க் குறைந்தது.

பிரமாதமாகத்தான் நடந்து முடிந்தது என்றாலும் இந்த உத்சவம் சுமார் எட்டு கோடி ரூபாயை முழுங்கியுள்ளது. இதில் ஒரு பகுதி மாநில அரசின் செலவாம்!

இதில் பிரதமருக்கு அளித்த பாதுகாப்புக்கான செலவு சேரவில்லை. சாதாரணமாக, ஒரு விசிட்டுக்கு 50 லட்சம் ரூபாய் செலவாகிறது.

விழாவின் இறுதி நிகழ்ச்சியின் போது வியட்நாம் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவரின் வருகை, செலவு கூடக் காரணமாயிற்று.

"இந்த உத்சவத்தின் செலவுக்கென பட்ஜெட்டில் நிதி ஒதுக்கப்படவில்லை. வரும் பட்ஜெட்டில்தான் சேர்த்துக் கொள்ள வேண்டும்" என்றார் ஒரு மாநில மந்திரி.

அதாவது இந்த எட்டு கோடி ரூபாயில் முடிக்கப்படவிருந்த ஆக்க திட்டங்கள் இன்னும் ஒரு வருடம் ஒத்திப் போடப்படும்!

இது தவிர, பம்பாயில் வேலைக்குச் செல்லும் மக்களிடையே ஒரு பயம் பற்றிக் கொண்டிருக்கிறது.

இந்த அப்நா உத்சவின் செலவை ஈடுகட்ட உத்யோக வரி **(Profession tax)** நிச்சயம் அதிகரிக்கப்படும் என்பதுதான் அந்த அச்சம்.

போதாக்குறைக்குத் தற்போது நடந்து முடிந்த 'தி என்கவுண்டர்' என்னும் பிரஞ்சு மகோற்சவத்தின் ஆரம்ப விழாவுக்கு ஆன செலவு சுமார் இரண்டு கோடி ரூபாய்.

"இதுவும் நம் தலையில்தானே விடியப் போகிறது?" என்று கேட்கிறார் மாதச் சம்பளக்காரரான ஒரு பம்பாய் வாசி.

— பால்கி.



"இந்தப் பாலம் சீக்கிரமே இடிஞ்சு விழுந்துடும்னு எதை வச்சுச் சொல்றே?"

"இதை மேற்பார்வை பார்க்கற இஞ்சினியர் பங்களா ரொம்ப ஸ்ட்ராங்கா உருவாகிக்கிட்டிருக்கே."

— ஐயாறு ஐந்தாமரை.

# இங்கேயும் பேரம்!



கருத்திற்குப் பஞ்சமில்லை
கதைக் கணையும்
வற்றவில்லை
ஆனாலும்
வீணாகும் நேரத்தில்
விரலும் மனமும்
கூட்டணி அமைத்து
வெற்றியைத் தேட
பேரம் பேசுகின்றன.
படியவில்லை.

— மேனா.



# இந்து சிட்பண்ட்ஸ் (மதுரை) பிரைவேட் லிமிடெட்

**14 வது வருடம்**

## இந்துவின் புதிய கிளையும், பரிசுகளும்

எமது கோவை கிளை
**586, ஒப்பண்ணக்காரத் தெரு, கோயம்புத்தூர்—641 001.**
என்ற முகவரியில் திறக்கப்பட உள்ளது.

| சீட்டின் மதிப்பு ரூ. | மாத சந்தா ரூ. | | மொத்த மாதங்கள் | இலவச பரிசுகள் |
|---|---|---|---|---|
| 10,000 | 100 | x | 100 | மதிய உணவு சாப்பாட்டு தட்டு செட் |
| | 250 | x | 40 | |
| 15,000 | 500 | x | 30 | பிளாஸ்க் |
| 20,000 | 800 | x | 25 | |
| 25,000 | 250 | x | 100 | 'எக்ஸ்ப்ரஸ்ஸோ லான்' பான் |
| | 625 | x | 40 | |
| 50,000 | 500 | x | 100 | 4 மடிப்பு குடை (or) சுவர் கடிகாரம் |
| | 2,000 | x | 25 | |
| | 1,000 | x | 50 | |
| 1 லட்சம் | 1,000 | x | 100 | குக் அண்ட் சர்வ்செட் |
| | 2,500 | x | 40 | |
| 2 லட்சங்கள் | 5,000 | x | 40 | வெள்ளி விளக்கு |
| 3 லட்சங்கள் | 6,000 | x | 50 | ½ சவரன் தங்கம் |



**INDIA'S LARGEST PAID UP CAPITAL CHIT COMPANY**

**இந்து இன்வெஸ்ட்மெண்ட்ஸ்**
**பிக்ஸட் டெபாசிட்டுகள் ஏற்கப்படுகிறது.**

பின் தேதியிட்ட வட்டி காசோலைகள் வேண்டுகோளுக்கிணங்க கொடுக்கப்படும்

6 மாதங்கள் — 14 % வட்டி
1 வருடம் — 18% வட்டி

ஒரு வருடம் அதற்கு மேலும் உள்ள டெபாசிட்களுக்கு கவர்ச்சிகரமான பரிசுகளும் மற்றும் வட்டி கொடுக்கப்படும்

நிர்வாக மற்றும் மத்திய அலுவலகம்:
**155, வடக்கு உஸ்மான் சாலை, சென்னை—600 017.**
**போன்: 445529, டெலக்ஸ்: 8868 TANX IN**

கிளைகள்

- 154, வடக்கு உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை — 600 017. போன்: 447888 & 447333
- 194, வக்கீல் புதுத்தெரு, மதுரை — 625 001. போன்: 34940 & 31351
- 22, வணிகர் தெரு, காஞ்சிபுரம் — 631501. போ 3048
- 220, N.S.C போஸ் ரோடு, 2-வது மாடி, ஜார்ஜ் டவுன், சென்னை — 600 001. போன்: 585901 & 585178.
- 106, பெரிய தெரு, திருவண்ணாமலை — 606 601. போன்: 2681
- 586, ஒப்பண்ணக்காரத் தெரு, கோயம்புத்தூர் — 641 001.

**விண்ணப்ப பாரங்களும், பரிசுகளும் எமது கீழ்க்கண்ட ரெஸிடெண்ட் மேனேஜர்களிடமும் கிடைக்கும்:**

**திருச்சி:** திரு. S.R. சேகரன், A.K.C. இல்லம், சரஸ்வதி நர்ஸிங் ஹோம் எதிரில், சாலை தெரு, திருச்சி — 18. திரு. T.S. அனந்த கிருஷ்ணன், 178, கணபதி காலனி, T.V. கோயில், திருச்சி—5. **திண்டுக்கல்:** திரு. அப்துல் சலீம், 15, நல்லுபா சாகிப் தெரு, திண்டுக்கல். **விழுப்புரம்:** திரு. ஹாஜா பெய்க், V.V.A. பில்டிங், ஹிந்துஸ்தான் டவர், திருச்சி ட்ரங்க் ரோடு, விழுப்புரம். **கடலூர்:** திரு. D. ஷண்முகம், M/s. மீனா ஜுவல்லர்ஸ், 2, லாரன்ஸ் ரோடு, கடலூர்—607 002. போன்: 744. **நெய்வேலி:** திரு. G. இளங்குமரன், பிளாக் — 2, D-22, மாணிக்க வாசகர் ரோடு, நெய்வேலி—607 801. **கும்பகோணம்:** திரு. டி. ஸ்வாமிநாதன், 8, ஹெட் போஸ்ட் ஆபீஸ் ரோடு, கும்பகோணம், போன்: 21789. **திருவாரூர்:** திருமதி T. சாந்தி, 16, ஐயனார் கோவில் தெரு, திருவாரூர். **குன்னூர்:** திரு K.K. லிங்கம், 21, கனவல் ஹில், குன்னூர், நீலகிரீஸ் — 643 101. போன்: 7054. **பொள்ளாச்சி:** திரு. V.R. விஸ்வநாதன், 493, Dr. அன்சாரி தெரு, பொள்ளாச்சி — 642 001. போன்: 4488. **நாகர்கோவில்:** திரு. N.S. சுரேந்திரன், பங்கஜ் இல்லம், வெள்ளாள தெரு, எடலக்குடி, நாகர் கோவில் — 629 002. போன்: 3370. **மயிலாடுதுறை:** திரு. J. சந்திரசேகரன், 73, செட்டித் தெரு, **ராணிப்பேட்டை:** திருமதி R. வசந்தி, 'ராம்நிவாஸ்', பாரதிநகர், சிப்காட்

**GROW RICH WITH INDU**

TAS



# வாழைப்பழம் விழுங்குவதில் மகத்தான சாதனை!

●● ஃபீடிங் பாட்டிலில் குழந்தைக்குப் பால் புகட்டும் தாய்மார்கள், பால் ரொம்பச் சூடாக இருக்கிறதா என்று தெரிந்து கொள்ள, மணிக்கட்டில் ஒரு சொட்டு விட்டுப் பார்ப்பார்கள். ஆனால், 'இது சரியான முறைதானா? நமது கைக்குத் தாங்கும் சூடு, குழந்தைக்குத் தாங்குமா?' என்ற சந்தேகங்கள் அன்னையர் உள்ளத்தில் அடிக்கடி எழ வாய்ப்புண்டு. இந்தச் சிக்கலிலிருந்து விடுபட, ஒரு புதிய பிளாஸ்டிக் பாட்டிலைக் கண்டுபிடித்திருக்கிறது ஓர் அமெரிக்க நிறுவனம். இது நான்கு வித நிறங்களில் கிடைக்கிறது. குழந்தைக்குத் தாங்கக்கூடிய சூட்டில் நிறம் மாறாது. தாங்க முடியாத சூடு எனில் பாட்டில் நிறம் மாறி, வெளிறிப் போகும்! ஆறியதும் பாட்டில் நிறத்தைத் திரும்பப் பெறும். நிறம் மங்க ஆரம்பிக்கும் சமயம் தான் குழந்தைக்கு இதமான சூடு என்று தாய்மார்கள் புரிந்து கொள்ளலாம்!

●● இரண்டே நிமிஷங்களில் இருபத்திரண்டு வாழைப் பழங்களை விழுங்கி, ராஞ்சி நகர் டாக்டர் நஜெய்ன் சிங் ஒரு புதிய சாதனை படைத்திருக்கிறார்! இதில் தோலுரித்த நேரமும் அடங்கும். இதற்கு முன் சாதனை படைத்து, கின்னஸ் புத்தகத்தில் இடம் பெற்றுள்ள அமெரிக்க டாக்டர் அல்கானா, இரண்டு நிமிடங்களில் பதினேழு வாழைப் பழங்களைத்தான் தோலுரித்து விழுங்கியிருக்கிறார்.

●● பேசும் மைனாக்களுக்காக மலேசியாவில் ஒரு போட்டி நடந்தது. பரிசு பெற, மைனாக் குருவிகள் எந்த மொழியில் வேணுமானாலும் பேசலாம். ஆனால் ஒன்று; மலே மொழியில் பேசும் மைனாக்களுக்கு விசேஷச் சலுகையாகக் கூடுதல் மதிப்பெண்கள் தரப்பட்டன! இங்கே ஹிந்தியைத் திணிக்கவும் பிரபலப்படுத்தவும் பல முயற்சிகள் மேற்கொள்வோர் இது போன்ற நூதன முறைகளையும் கையாண்டு பார்க்கலாமே!

●● மாதா ஜகதாம்பா ஒரு சந்நியாசினி. வயது எழுபத்திரண்டு. உஜ்ஜெய்னில் வாழ்கிறார். ஒன்பது வயதிலேயே சந்நியாசினியாகி விட்ட இவருடைய ஆன்மிக வளர்ச்சி பலரைக் கவரத்தான் செய்கிறது. ஆனால் அதைவிட அதிகமாக இவரிடம் உள்ள கவர்ச்சி, இவரது தலைமுடியின் வளர்ச்சி! அது இருபத்தோரு அடி நீளம் வளர்ந்திருக்கிறது! அந்த அதிசயத்தைப் பார்க்கும் ஆர்வத்தாலேயே ஏராளமான மக்கள் மாதா ஜகதாம்பாவைத் தரிசிக்க வருகிறார்கள். மாதா ஜகதாம்பாவைப் பரிசோதித்த வேலூர், பம்பாய் டாக்டர்கள், 'இந்த அபரிமிதமான கேச வளர்ச்சிக்குக் காரணம் தெரியவில்லை' என்று கையை விரித்து விட்டார்கள்!

●● தென் அமெரிக்க நகரம் ஒன்றில் பதின்மூன்றாவது மாடியிலிருந்து ஒரு வளர்ப்பு நாய் பால்கனி வழியே வெளியே விழுந்து விட்டது! அப்போது சாலையில் நடந்து போய்க் கொண்டிருந்த 75 வயது பெண்மணி மீது நாய் விழுந்ததால், அந்த மாது உடனடியாக மரணம் அடைந்தார். இதைக் காண ஒரு பெரும் கூட்டம் கூடி விட, அந்தக் கூட்டத்தின் மீது ஒரு பஸ் மோத, அந்த விபத்தில் 46 வயதான இன்னொரு பெண்மணியும் இறந்து போனார். இதைக் கண்டு ஒரு மனிதனுக்கு இருதயத் துடிப்பே நின்று போக, அவனும் உயிரை விட்டான்! இவ்வாறு மூன்று மனிதர்களின் உயிர்களைப் பலி வாங்கிய அந்த நாயும் இறந்து போயிற்று!



பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் ப்ரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறுமாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.



# யெஸ்... ரூபா ஜெகன் ஸ்பீக்கிங்

முன்பெல்லாம் மேனேஜரிடம் ஃபோன்ல பேச - றதுன்னு ரொம்ப பயமா இருக்கும். அவர் இங்கிலீஷ்ல கேக்கற கேள்விக் கெல்லாம் பதில் சொல்லத் தெரியாம முழிச்சுண்டு நான் பட்ட கஷ்டத்தை சொல்லி மாளாது.

வேலையை ராஜினுமா பண்ணிடலாமான்னு நான் யோசிச்சுண்டு இருந்தப்போ விவேகானந்தா கல்வி நிலையத்தின் விளம்பரத்தை பார்த்தேன். வீட்டு வேலையையும் செஞ்சுண்டு வேலைக்கும் போயிண்டு இருக்கற என்னால அவா நடத்தர நேர்முக வகுப்புல சேர்ந்து படிக்க நேரமிருக்காதேன்னு கவலைப் பட்டேன். தபால் மூலமா படிக்கலாம்னு அது நேர சொல்லித்தர மாதிரி இருக்குமான்னு சந்தேகமா வேற இருந்தது. தற்செயலா ஒரு நாள் என்னுடைய நாத்தனார் பொண்ணு லலிதாகிட்ட இதுபத்தி பேசிண்டிருந்தப்போ அவ விவேகானந்தா கல்வி நிலையத்தில தபால் மூலம் இங்கிலீஷ் பேச கத்துக்கற விஷயம் தெரிஞ்சுது. பாடம் எல்லாம் நேரிடையா சொல்லிக் குடுக்கற மாதிரி இருக்கு ரொம்ப நன்னு புரியறதுன்னு அவ சொன்னா. அவ குடுத்த தைரியத்துல நான் தபால் முறை பயிற்சியில சேர்ந்தேன்.

மொதல்ல மூணு மாசம் இங்கிலீஷ் கிராமர் கத்துண்டேன். அதுக்கு அப்பறம் மூணு மாசம் ''ஸ்போக்கன் இங்கிலீஷ்'' கத்துண்டேன்.

உண்மையை சொல்லப் போனா முன்னால மேனேஜர்கிட்ட பேசணும்னு பயந்துண்டு இருந்த நானா இப்படி இங்கிலீஷ்ல சரளமா பேசறேன்னு எனக்கே ஆச்சர்யமா இருக்கு. எங்கிட்ட ஏற்பட்டுருக்கற மாற்றத்தை என்னால நன்னு புரிஞ்சுக்க முடியறது. கான்வென்ட்ல படிச்சுண்டு இருக்கற என்னோட குழந்தைக்கு பாடஞ் சொல்லிக் கொடுக்கறத்துக்கு நான் கத்துண்ட இங்கிலீஷ் கிராமர் ரொம்ப உதவியா இருக்கு. ஹஸ்பண்ட் கூட எங்கேயாவது வெளில வாசல்ல போனா சந்திக்கரவாளோட இங்கிலீஷ்ல பயப்படாம பேச முடியறது.

மொத்தத்துல சொல்லப் போனா இங்கிலீஷ்ல பேச முடியலையேன்னு கவலைப்படற என்னைப் போல எத்தனையோ பேர்களுக்கு நல்ல முறையில பயிற்சியளிக்கிறது விவேகானந்தா கல்வி நிலையம்.

*"Really they are doing wonderful service".*

**ஆங்கிலத்தில் பேச விரும்பும் அனைவரும் இப்பயிற்சியில் சேர்ந்து பயன் பெறலாம். உடனே தொடர்பு கொண்டு நீங்களும் பயன் பெறுங்கள்.**

விவேகானந்தா கல்வி நிலையம்
த. பெ. எண் : 4986
9, மேட்லி ரோடு, தி.நகர்,
சென்னை-17.

# பெரியஅளவு! அருஞ்சுவை!

பல்சுவை அனுபவம்!

நியூட்ரின்



**SuperStar**



சுவை மிக்க உன்னத டா:.பி




Visesh/8818/Tam